# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்




## காம்ப்ளான்®

**ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

வளரும் குழந்தை-
களுக்கென்றே
சிறப்பான சில
தேவைகள்
உள்ளன—வளரும்
வயதிலே உடம்புக்குத்
தேவைப்படும்
மிகச் சிறந்த புரதம்,
22 மூலாதார
ஊட்டச் சத்துக்கள்
—அளிக்கிறது
காம்ப்ளான். மறவாதீர்கள்,
டாக்டர்களின் சிபாரிசு
பெற்ற, திட்டமிட்ட உணவு
காம்ப்ளான்.

லின்டாஸ்-GLC-6-2012 TM

**இலவசம்!** 32 பக்கங்கள் கொண்ட கைப் புத்தகம்.

''குடும்பத்திற்கான பரிபூரண ஊட்டச் சத்துணவு வழிகாட்டி''
50 பைசா தபால்தலை இணைத்து இம் முகவரிக்கு எழுதிப் பெறுக:
தபால் பை நம்பர் 19118, (Comp) G-78, பம்பாய் 400 025.

## திட்டமிட்ட பரிபூரண உணவு — காம்ப்ளான்®

இந்தச் சிரிப்புத் துணுக்குகளுக்குப் படம் போட்டிருப்பவர்....

(1) உ. ராஜாஜி
(2) ஜிட்ரனி மோகனன்
(3) பத்மாசுப்பிரமணியம்
(4) ரஜினிகாந்த்

இவர்களில் யார்?
தெரியாவிட்டால் புரட்டுங்கள் 14ம் பக்கம்.



''எங்கப்பா சாப்பிடும்போது உப்பு கம்மி, காரம் அதிகம், ருசி இல்லேன்னு திட்டிண்டே சாப்பிடுவார்.''

''ஏன், உங்கம்மா மோசமா சமைப்பாங்களா?''

''ஊஹூம்! சமையல் எங்கப்பா தான். பக்கத்து வீடுகளுக்கு அது தெரியக்கூடாது என்பதற்குத்தான் இப்படி திட்டிக் கொள்வார்.''

—ஆர். அரிகோபி

ஹோட்டலில் சாப்பிடுபவர் சர்வரிடம்: இதோ பாருப்பா பத்து வருஷமா பெண்டாட்டி மாதிரி உன் கையால உபசரிக்க நீ சாப்பாடு போடறது வாஸ்தவம்தான். அதுக்காக விரலுக்கு ஒரு மோதிரம் உண்டா? ஒரு பாண்ட் உண்டான்னு சலிச்சுக்கிறியே இது நியாயமா?

—என். எஸ். வி. குருமூர்த்தி






பாரிஸில் ஒரு காபரே பெண்ணின் அளவுகளை ஒருவர் '37-23-35-0' என்று சொன்னார்.

''அதென்ன சைபர் கடைசியில்?''

''அறிவு'' என்று பதில் வந்தது.

—மஞ்சு தேவன்

''கலப்புத் திருமணம்னு சொன்னீங்களே, பெண்ணும் பையனும் வெவ்வேறு ஜாதிங்களா?''

''இல்லே.... பொண்ணோடே அப்பா சோடாக் கம்பெனி வெச்சிருக்கார்... பையனோடே தகப்பனார் சாராயக்கடை வச்சிருக்கார்.''

—என். எஸ். வி. குருமூர்த்தி



# தொழில் கல்வி தொடங்குவோம்!

அண்ணா பல்கலைக் கழகத் துணைவேந்தர் வி. ஸி. குழந்தைசாமி தலைமையில் அமைந்த கமிட்டி தொழிற்கல்வி அமலாக்கம் பற்றி ஆராய்ந்து ஓர் அறிக்கையை முதல்வரிடம் சமர்ப்பித்துள்ளது. இந்த அறிக்கையை விவாதிக்க ஒரு சர்வ கட்சிக் கூட்டத்துக்கு முதல்வர் ஏற்பாடு செய்கிறார் என்று வைத்துக் கொள்வோம்....!

**முதல்வர் எம். ஜி. ஆர்.**: இந்த அறிக்கையை யொட்டி தொழில் கல்வி குறித்துப் பேசுமாறு உங்கள் அனைவரையும் அழைக்கும் போது சமையல் தொழில் எப்படி ஒவ்வொருவரது வாழ்விலும் இன்றியமையாத இடத்தைப் பெறுகிறது என்பதை நாம் நினைத்துப் பார்க்கக் கடமைப்பட்டிருக்கிற வேளையில் சமையல் செய்தால் மட்டும் போதாது. சத்தான உணவு தயாரிக்கும் கலையைக் கற்க வேண்டும் என்பதையும் அவ்வாறு ஒவ்வொருவருமே சத்துணவு தயாரிக்கும் கலையில் தேர்ச்சி பெறுவது நல்லதென்றும், அது முடியாமல் போனால் நானே உபாத்தியாயர்களாக விளங்க நினைக்கும் மாணவர்களேனும் சமையல் தொழிலைப் பயில்வது வேலை வாய்ப்பைக் கருதுகையில் நல்லது என்று சுட்டிக்காட்ட விரும்புகிற நேரத்தில் ஒருவேளை வாத்தியார் உத்தியோகம் கிடைக்கவில்லை யென்றாலும் சமையல்காரர் வேலையாவது கிடைக்கும் என்பதையும் நான் பணிவோடும் பரிதவிப்போடும் ஆசையோடும் பாசத்தோடும் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

**நாஞ்சில் கி. மனோகரன்**: தொழில் கல்வி என்றதுமே எனக்கு முதலில் நினைவு வருவது ஜோதிடத்தொழில்தான். இந்தத் தொழிலைச் சிறப்பான விதமாகக் கற்றுத் தந்தால் மாணவ மணிகள் எதிர்காலத்தில் ஜோதிட மணிகளாக விளங்குவதோடு நாடும் மக்களும் முன்னேற நல்ல பல ஜோதிடக் கருத்துக்களைக் கூறியபடி இருப்பார்கள். மந்திரி சபை கவிழ்த் தேதி நிர்ணயித்து அந்தத் தேதியில் அமைச்சரவை கவிழாமல் இருக்கும்போது புதிய தேதி அறிவிப்பதால், காலண்டர், டயரி உற்பத்தியும் பஞ்சாங்க விற்பனையும் அதிகரிக்கும். இவை யெல்லாவற்றையும் விட முக்கியமாக நமது பிரதமருக்கும் ஜோதிடக் கலையில் அபார ஈடுபாடு உண்டு என்பதை நோக்குகையில் ஜோதிடத் தொழிலைத் தொழிற் கல்வியில் முக்கிய பாடமாக இடம்பெறச் செய்தால் நமது தொழிற் கல்வி முயற்சிக்கு மத்திய அரசின் மான்யம் கிடைப்பது எளிதாகும் என்று ஜோதிடம் கூற விரும்புகிறேன்.

**ராமச்சந்திரன்**: எல்லா நாட்டிலும் என்றைக்கும் தேவைப்படுகிற தொழிலாளி ஒருவர் உண்டு என்றால் அவர் எலக்ட்ரிஷியன் தான். நாம் மின் உற்பத்தி போதுமான அளவில் செய்ய முடியவில்லை என்றாலும் அதை ஈடுகட்டுவது போல எல்க்ட்ரீஷியன்களையாவது ஏராளமாக உருவாக்கலாம். இவர்கள் மின்வெட்டின்போது சமயோசிதமாக நடந்து கொள்ள விசேஷப் பயிற்சி பெற்றிருப்பார்கள். உதாரணமாக ஃபேன் ஓடவில்லை என்றால் பனை ஓலை விசிறி தயாரிக்கவும் விநியோகிக்கவும் அறிந்திருப்பார்கள், விளக்குகள் எரியாத நேரங்களில் மெழுகு வர்த்தி வியாபாரம் நடத்திச் செல்வம் சேர்ப்பார்கள். தொழிலகங்களில் மிஷின்கள் ஓடாத நாட்களில் அவை துருப்பிடிக்காமல் எண்ணெய் போட்டுத் துடைத்துத் துப்புரவாக வைக்கச் சிறப்புப் பயிற்சி பெற்றிருப்பார்கள். இத்தகைய எலக்ட்ரீஷியன்களை ஏராளமாக உருவாக்க வேண்டிய பொறுப்பும் கடமையும் நமக்கு இருப்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.






**அரங்கநாயகம்**: பைண்டிங் தொழிலைத் தான் மாணவர்களுக்கு அதிகமாகக் கற்றுத் தரவேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. அவ்வாறு செய்தால் நூலகங்களுக்குப் புத்தகங்கள் வாங்கும் பணத்தைக் கணிசமாக மிச்சப்படுத்தலாம். பத்திரிகைகளில் வரும் கதைகள், கட்டுரைகள், தொடர் கதைகளைத் தனித் தனியாகப் பிரித்துப் பைண்டு செய்வதில் நம் மாணவர்கள் விசேஷத் தேர்ச்சி பெறலாம். அவற்றைக் கொண்டே நூலகங்களை நிரப்பிவிடலாம் என்பதோடு நூலகங்களில் படித்துப் படித்துக் கந்தலாகிப் போன புத்தகங்களை மறுபடி மறுபடி பைண்டு

செய்து அடுக்கலாம். இந்த பைண்டிங் தொழிலுக்கு அதிகமான மின் சப்ளை தேவை இல்லை என்பது விசேஷ கவனத்துக்குரியது.

**குமரி அனந்தன்:** பேச்சாளருக்கு இருக்கும் மதிப்பும் தேவையும் வரவேற்பும் கிராக்கியும் வேறு எந்தத் தொழில் செய்பவருக்கும் கிடையாது. எனவேதான் நான் மேடைப் பேச்சுக் கலை பற்றிப் புத்தகமே எழுதியிருக்கிறேன். நமது மாணவர்களுக்கு இளம் வயதிலேயே மேடை ஏறிப் பேசக் கற்றுக் தந்து விட்டால் தேர்தல் காலத்தில் அவர்களுக்கு நிரம்பக் கிராக்கி இருக்கும். நன்றாகச் சம்பாதிப்பார்கள். தேர்தல் இல்லாத கால கட்டங்களில் என்ன செய்வது என்று கவலைப்பட வேண்டியதில்லை. நமது புரட்சித் தலைவர் ஆட்சியில் நினைவு விழாக்களுக்கும் பிறந்தநாள் விழாக்களுக்கும் பஞ்சமே இல்லை. எனவே பிழைத்துக் கொள்வார்கள். இதுவும் போதாது என்றால் சத்துணவுத் திட்டம் ஆரம்பமானது காமராஜர் காலத்திலா தியாகராஜர் காலத்திலா என்று பட்டி மன்றத்தைப் பட்டி தொட்டிகளி



லெல்லாம் அரசாங்கமே முன்னின்று நடத்தினால் போதும். பேச்சுத் தொழில் பயின்ற அத்தனை பேருக்கும் வேலை இருக்கும்.

**மு. கருணாநிதி:** கல் தோன்றி மண் தோன்றாக் காலத்திலேயே கல்லைச் செதுக்கிச் சிலை வடித்தவன் தமிழன். எனவே சிற்பக் கலை பற்றி இங்கே பேசப்படல் வேண்டும். பாரதி நூற்றாண்டு முடிந்து விட்டதால் இனி பாரதிசிலைகளுக்கு அதிகமான தேவை இராது. எனினும் பெரியார் சிலை, அண்ணா சிலைகளுக்கு என்றுமே தேவை யிருப்பதால் சிலை தயாரிப்புத் தொழிலை மாணவர்களுக்குப் பயில்விக்கும்போது சிறப்பாக இந்த இரு சிலைகளையும் தயாரிக்கக் கற்றுத் தர வேண்டும். அண்ணா பெரியார் சிலைகளை உருவாக்கப் பயின்ற மாணவன் யாரும் பணத்தட்டுப்பாட்டையோ வேலையில்லாத் திண்டாட்டத்தையோ சந்திக்கவே நேராது. இதோடு குதிரைப் பந்தய ஒழிப்புச் சிலை, குதிரைப் பந்தயம் மறுவாழ்வு பெற்ற சிலை, மதுவிலக்கு ரத்து சிலை, மதுவிலக்கு அமலாக்கச் சிலை, மதுவிலக்குத் தளர்த்துவதற்குச்சிலை என்று சிலவற்றையும் தயாரிக்கப் பழகிய மாணவ மணிகளுக்கு என்றென்றும் ஒளிமயமான எதிர்காலமிருக்கும். அப்படியும் வேலை யில்லாச் சிற்பிகள் யாரேனும் இருப்பின் அவர்களுக்காகக் கோட்டங்கள் கட்டும் பணியையும் தமிழ்த்தாய், தமிழறிஞர்களின் சிலைகளை வைப்பதற்காகவே தமிழ் விழா எடுக்கும் பணியையும் அரசாங்கம் மேற்கொள்ளலாம்.

**மரகதம் சந்திரசேகர்:** முதலில் மாருதி தொழிலகத்தை விட்டு வெளியே வரும் கார்களில் முழுக்க முழுக்க ஜப்பானிய பாகங்களே இருக்கும். ஆதலால் காரின் விலை குறைவாகவும் தரம் உயர்வாகவும் விளங்கும். ஆனால் கவலைப்பட வேண்டாம். போகப் போக நம் நாட்டிலேயே தயாரான பாகங்களைக் கொண்டு உருவாகப்போகும் மாருதி கார்கள் அடிக்கடி ரிப்பேராகும். எனவே மோட்டார் கார் மெக்கானிக் தொழிலை நமது மாணவ மணிகளுக்குக் கற்றுத் தருவது அவர்கள் எதிர் காலத்துக்கு மட்டு மின்றி மாருதி தொழிலகத்தின் எதிர்காலத்தை உத்தேசித்தும்புத்திசாலித்தனமான காரியமாகும். இன்னொரு முக்கிய விஷயம். சத்துணவுத் திட்டத்தை



மதியத்தில் மட்டும் அமல்படுத்திக் குழந்தைகளைக் காலையிலும் மாலையிலும் வாட விடுவது போல் மோட்டார் கார் மெகானிக் தொழிலை மட்டும் கற்றுத் தந்து ஒரு மாணவனைச் சோதிக்கலாகாது. எல்லா விதமான தொழில்களையும் எல்லா மாணவர்களும் கற்றுத் தேர்ந்தால் அவர்களுக்கு என்றென்றைக்கும் கவலையே இராது. இதற்கு முதலமைச்சர் வழி செய்ய வேண்டும்.

ஒரு குரல்: திரு குழந்தைசாமி பலவிதமான தொழில்களைப் பற்றி இந்தத் தொழில் கல்வி அறிக்கையில் பேசியிருந்தாலும் அரசியலைத் தொழிலாகக் கொள்வது குறித்து ஏதும் குறிப்பிட்டிருக்க மாட்டார் என்று நம்புகிறேன். அப்படியே அரசியலை ஒரு தொழிலாக அவர் சேர்த்திருந்தாலும் அதைப் பாடத் திட்டத்திலிருந்து நீக்கிவிட வேண்டும் என்று கருதுகிறேன்.

அனைவரும் (ஒரே சமயத்தில்): ஆமாம்! ஆமாம்! அரசியல் தொழிற் கல்வி கூடவே கூடாது! ஐயோ! அப்புறம் நம் கதி என்னாவது வேண்டாம்! வேண்டாம்!

# அபிதா



சாந்தி, தியாகராஜன்

எல்லாமே புதிதாக இருக்க வேண்டும் என்று நினைத்திருப்பார்கள் போலும் முத்ரா தியேட்டர் குழுவினர். விளம்பரத் தாளில் கூட புதுக் கவிதை பேசுகிறது:

லா.ச.ரா.வின்
எழுத்தில் அதிரும் மந்திர த்வனியில்
ஒரு மாத்திரையேனும்
மேடையில் மீட்க முடிந்திருந்தால்—
தவத்திற்கு
வரம் கிடைக்காவிட்டாலும்
தரிசனமாவது மிஞ்சும்.

'அபிதா'வைப் படிக்காதவர்களுக்கும்கூட நாடகம் பிடித்தது; புரிந்தது. இளமையில் பார்த்துப் பேசி, மகிழ்ந்த அபிதா அவன் உள்ளத்தில் ஒன்றிவிட, முதுமையிலும் அவன் அவளைத் தேடும் தாபமும் தாகமும் மேடையில் கொண்டுவர முடிந்ததுதான் ஆச்சரியம். லா. ச.ரா.வின் வாக்கியங்களையே வசனத்தில் பெரும்பாலும் கையாண்டிருப்பது காரணமாயிருக்கலாம். நாடகமாக்கம்: இளைஞர் ருத்ரன். (தொழில் டாக்டர்) இயக்கியவர்: ஸ்ரீனிவாசன்.

ஃப்ளாஷ் பாக் உத்திகளில் வண்ண ஸ்லைடுகள் மேடையில் தோன்றி மறைகின்றன. எம். பி. சீனிவாசனின் மிருதுவான இசை.

பூர்ணம் விசுவநாதன், 'லா.ச.ரா.வின் கதையை இத்தனை அருமையாக மேடைக்குக் கொண்டு வந்திருக்கிறார்களே!' என்று பாராட்டினார்.

''தியேட்டர் மூவ்மெண்ட்டே இல்லாத நகரம் சென்னை ஒன்றுதான் என்று, சமீபத்தில் சென்னை வந்த பிரிட்டிஷ் நாடக நிபுணர் ஜான் மார்ட்டின் சொன்னார். அவர் குற்றச்சாட்டைக் கொஞ்சமாவது அழிக்க முடியும் என்று தோன்றுகிறது. —சாருகேசி

## சாந்தி நிகழ்த்திய சாதனை

நகைச் சுவை நாடகங்கள், வசனங்களுக்கு முக்கியத்துவம் தந்து நடிக்கப்படும் நாடகங்கள்.....

இவற்றிலிருந்து வித்தியாசமாக உணர்ச்சிகளுக்கு மதிப்பளித்து அரங்கேறிய நாடகம் அபிதா.

வசனமே இல்லாத காட்சிகளிலும் பாவபூர்வமாக நடித்து ரசிகர்களின் பாராட்டுதலைப் பெற்றார் சாந்தி.

இதற்கு பிரியா ஸ்டேஜ் நாட்டிய நாடகக் குழுவில் அவர் பெற்ற அனுபவம் துணை செய்திருக்கலாம். நாட்டிய நாடகத்துக்கு பாவம்தானே பிரதானம்.

சாந்தியின் நாடகப் பிரவேசம் சுஜாதா எழுதி பூர்ணம் அரங்கேற்றிய 'டாக்டர் நரேந்திரனின் விநோத வழக்கு' மூலம்.

லா.ச.ரா.வின் அபிதாவில் நடித்தது பற்றி சாந்தி சொல்கிறார்:

''அது ஓர் இனிமையான பரீட்சை. நாடகம் முடிந்து, வந்திருந்தவர்கள் பலரும் பாராட்டியபோது பரீட்சையில் நல்ல மார்க் வாங்கிப் பாஸ் பண்ணி விட்டதாய் நினைத்து மகிழ்ந்தேன்.''

நாடகத்தின் சிறப்புக்குத் தியாகராஜனின் நடிப்பும் பெருந் துணை.

-எஸ். சந்திரமௌளி

மேலட்டை: சாந்தி

வண்ணப்படம்: கேதார்நாத்



# சீக்கிரம்! உங்கள் குழந்தையுடைய காயத்தின் சிறந்த பாதுகாப்பிற்கு, உபயோகிப்பீர்

# பாண்ட்-எய்ட் பிராண்டு டிரஸ்ஸிங்குகள்.

**அவனது திறந்த காயத்தில் சிறிது அழுக்கு இருந்தாலும் கூட தொற்றுப் பரவக் கூடும்.**

தொற்றுக்கு எதிராக, திறந்த காயங்களின் பாதுகாப்பிற்கு உலகமெங்கிலும் உள்ள தாய்மார்கள் நம்புவது பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்.

பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்கில் உள்ள நிருபணமான ஆன்டிசெப்டிக், காயத்தை ஆற்றுவதற்கு உதவுகிறது. அதிலே: காற்றோட்டமளித்து விரைக் தாற்றும் நுண்துளைகள்; ஒட்டிக்கொள்ளாத வசதிமிக்க ஒப்பற்ற அடுக்கு.

காயங்களின் வெவ்வேறு வடிவம் மற்றும் அளவுகளுக்கு ஏற்ப வருகின்றன பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள். பெரிய புண்கள், சிறிய வெட்டுக் காயங்கள், கட்டுப்போட முடியாத இடங்கள், கொப்புளம் மற்றும் சிராய்ப்புகளுக்கு எப்போதும் உங்கள் கைவசமிருக்கட்டும் பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்.






**பாண்ட்-எய்ட் பிராண்டு டிரஸ்ஸிங்குகள்.**

**தொற்றுக்கு எதிரான மிகவும் நம்பகமான பாதுகாப்பு.**

*Johnson & Johnson*

கல்கி



1983 ஜனவரி 30
துந்துபி தை 17
மலர் : 41 இதழ் : 27




# பாடம் கற்றாரில்லை; படிப்பினை பெற்றாரில்லை!

இ. காங்கிரஸுக்குக் கர்நாடக, ஆந்திர மக்கள் சமீபத்திய தேர்தலில் நல்ல பாடம் கற்பித்தார்கள். ஆனால் படிப்பினை பெற இ. காங்கிரஸ் தயாராக இல்லை என்பதைத் தேர்தலுக்குப் பிறகு அக்கட்சி நடந்து கொள்ளும் விதம் உணர்த்துகிறது.

கர்நாடகத்தில் இன்று எதிர்க் கட்சியாக உள்ள இ. காங்கிரஸின் சட்டசபை உறுப்பினர்கள் ஒரு தலைவரைத் தேர்ந்தெடுக்கத் திராணியற்றவர்களாகி, தலைவரை நியமிக்கும் பொறுப்பை ''ஏகமனதாக'' மீண்டும் இந்திரா காந்தியிடமே ஒப்படைத்தார்கள்! மேலிடம் வீரப்பா மோய்லியைச் சட்டசபை இ. காங்கிரஸ் கட்சித் தலைவராக நியமிக்க, பிறகு சட்டமன்ற இ. காங்கிரஸ் உறுப்பினர்கள் அவரையே ''ஏகமனதாக''த் தேர்ந்தெடுத்தனர்!

இப்படித் தலைவரைத் தேர்ந்தெடுப்பதாக ஒரு நாடகமாட அவசியமென்ன? சட்டசபையில் ஒரு கட்சியின் தலைமைப் பதவிக்குப் போட்டி இருப்பதும், தேர்தல் நடப்பதும் தோற்றவர் தமக்குப் பெரும்பான்மை ஆதரவு இல்லை என்று உணர்ந்து வென்றவரை வாழ்த்தி அவருக்கு ஒத்துழைப்புத் தருவதும் ஆரோக்கியமான உட்கட்சி ஜனநாயக நடைமுறை. இந்தப் போக்கை வளர்ப்பதற்குப் பதில் இ. காங்கிரஸ் மேலிடம் தலைவரை நியமிப்பதென்பதே வழக்கமாகி விட்டது. இவ்வாறு நியமனமானவருக்கு மற்றவர்கள் ஒத்துழைப்புத் தருகிறார்களா எனில் அதுவுமில்லை. சில இனங்களிலேயே உட்பூசல் மீண்டும் கிளர்ந்தெழுகிறது. ஒருவரையொருவர் கவிழ்க்கப் பார்க்கும் அநாகரிகம் தொடர்கிறது. இதனால்தான் ஆந்திராவில் அடுத்தடுத்து நாலு முதல்வர்களை மேலிடம் நியமிக்க நேர்ந்தது. கர்நாடகத்தில் குண்டுராவ் ஆட்சி தேர்தல்வரை நீடித்தது எனினும் அவரும் மேலிடத்தால் நியமிக்கப்பட்ட









வரே. கட்சிக்குள்ளேயே அவருக்கு எதிரிகள் தோன்றிப் பல குற்றச் சாட்டுகளுக்கு அவர்ஆளாகியும் மேலிடத்து ஆதரவு காரணமாகவே பதவி யில் நீடித்து வந்தார். மக்கள் இதிலெல்லாம் அருவருப்பு அடைந்துதான் இரு மாநிலங்களிலும் மாற்றுக் கட்சிகளுக்கு வோட்டளித்தனர்.

இதை இந்திரா காங்கிரஸ் புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. கர்நாடகத்தில் வீரப்பா மோய்லி நியமனமாகியுள்ளார் எனில் ஆந்திரா விலோ இதைவிட மோசமான விதத்தில் அக்கட்சி செயல்பட்டிருக்கிறது. இந்தத் தேர்தலில் வென்ற விஜயபாஸ்கர ரெட்டி நாடாளுமன்றத்தில் ஏற்கனவே தமக்குள்ள பிடிமானத்தை விட்டுக் கொடுக்க விரும்பாமல் எம். எல். ஏ. பதவியை ராஜிநாமாச் செய்து அத்தொகுதியில் உப தேர்தலுக்கு வழி வகுத்துள்ளார். ஆனால் சட்ட சபையை விட நாடாளு மன்றப் பதவியையே முக்கியமாகக் கருதும் இவரிடம்தான் சட்ட சபைக்கும் மேல் சபைக்கும் இ. காங்கிரஸ் கட்சித் தலைவரையும் இதர பொறுப்பாளர்களையும் நியமிக்கும் அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறது! இதற்காகவே ஒரு ''சேர்மன்'' பதவி இவருக்கென்று புதிதாகச் சிருஷ் டிக்கப்பட்டுள்ளது!

கட்சிக்குள் ஜனநாயகத்தை வளர்க்காதவர்களிடம் தேச ஜன நாயகத்தை ஒப்படைக்க மக்கள் முன்வர மாட்டார்கள்; முன்வரவும் கூடாது.

---

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

## 1

தூரத்தில் எங்கோ மணியோசை கேட்கிற மாதிரி இருந்தது. மெலிதாகப் புலன்கள் சலனப்பட யத்தனிக்கையில் கார்த்திக் நன்றாக 'ரஜாய்'க்குள் ஒடுங்கிக் கொண்டான். முந்தைய இரவு வெகு நேரம் கண் விழித்துப் படித்ததின் கனம் இமைகள் மேல் பாரமாய் அமர்ந்திருந்தது.

மணியோசையின் பரிணாமம் மெல்ல மெல்ல அதிகரித்தது — தொடர்ந்து ''சுக்லாம் பரதரம் விஷ்ணும்....!''

கார்த்திக் முழுவதும் உலுக்கப்பட்டவன் போல் விழித்துக் கொண்டான். அப்பாவின் வெண்கலக் குரலில் விஷ்ணு சஹஸ்ரநாமம் தொனிக்கையில் அவனுள் பரவிய லேசான நமைச்சலை அடக்கியபடி மறுபடியும் கண்களை மூடிக்கொண்டு ரஜாய்க்குள் ஒடுங்கினான். செய்யும் பூஜையை சுவாமிக்கு மட்டும் காது கேட்கும்படி செய்யக் கூடாதோ என்று தினம் தினம் இந்த வேளையில் தோன்றும் எரிச்சல் இப்பொழுதும் ஏற்பட்டது.

அப்பாவுக்கு எதைப் பற்றிய பிரக்ஞையும் இல்லை. சுவாமிமலைக்கும் டில்லிக்கும் இருக்கும் வித்தியாசத்தை அவர் இந்த ஜன்மத்தில் உணரப் போவதில்லை. இந்தக் குளிரில் அவர் மாட்டிக்கொள்ளும் ஸ்வெட்டரும் ஸாக்ஸும் கூட மற்றவர்களின் கட்டாயத்துக்காக என்று தோன்றும்...

ரஜாய்க்குள் முங்கியிருந்த நாசிக்குப் பல வாசனைகள் வந்தன. ஊதுபத்தியின் மணமும் தசாங்கத்தின் வாசனையும் நைவேத்தியத்துக்காக அம்மா செய்திருந்த பாயஸமோ, பொங்கலோ...

''நி பா ரா த னை ஏத்தப் போறேன் கணேசா!''

''இதோ இருக்கேம்ப்பா!''

''கார்த்திக் எழுந்துண்டாச்சா?''

''இன்னும் இல்லே!''

''நன்னாயிருக்கு இன்னும் எத்தனை நேரம் தூக்கம்? காமு, அவனை எழுப்பல்லே?''

அம்மா ஏதோ மெல்லிய குரலில் சமாதானம் சொல்ல, அதைத் தொடர்ந்து அப்பா பதில் ஏதும் சொல்லாமல் பெரிய குரலில், ''நீராஞ்சனம் சுமாங்கல்யம்'' என்று ஆரம்பித்ததும் அவன் விருக்கென்று எழுந்து படுக்கையைச் சுருட்டி அறையின் ஓரமாக வைத்துத் திடீரென்று தாக்கிய குளிரில் மௌனமாகக் குளியலறைக்குச் சென்றான். நல்ல வேளையாக பாய்லரில் வெந்நீர் இருந்தது. இவர்கள் எல்லாம் சீக்கிரம் எழுந்திருப்பதில் இது ஒரு சௌகரியம் என்று நினைத்துச் சிரிப்பு வந்தது.

குளியலறையோடு ஒட்டியிருந்த மூடப்படாத ரேழியில் குளிர் எலும்பைத் துளைத்தது. மேலே தெரிந்த ஆகாசம் இன்னும் கருப்பாக இருந்தது.

''காப்பி கிடைக்குமா காமு? பால் வாங்கிண்டு வந்தாச்சா?''

''விசாலம் போயிருக்கா பாலுக்கு. இன்னும் வரல்லே!''

அவனுக்குத் திக்கென்றது. 'அத்தை போயிருக்கிறாளா, இந்தக் குளிரில்?' அவன் அவசரமாக ஒரு சால்வையை மேலே போர்த்திக்கொண்டு செருப்புக்குள் காலைத் திணித்தபடி கிளம்பினான்.

''எல்லாரும் அவனைத் தலை மேலே தூக்கி வெச்சுக்கோங்கோ! இந்தக் காலத்திலே படிக்கறது ஒண்ணும் அதிசயமில்லே!''

அப்பா அம்மாவிடம் சத்தம் போடுவது கேட்டது.

அவன் வாசற்கதவை மெதுவாகச் சாத்தித் தெருவில் வேகமாக நடக்கையில் குளிரில் தாடைகள் கிடுகிடுவென்று நடுங்கின. நமக்கே இப்படி இருக்கும்போது அத்தைக்கு எப்படி இருக்கும் என்று நினைத்துக் குற்ற உணர்வு அதிகரித்தது.

சட், நாளையிலிருந்து சீக்கிரம் எழுந்திருக்க வேண்டும். இரவுதான் படிக்க முடிகிறது இந்த வீட்டில். இரவு கண் விழித்தால் காலையில் குளிரில் இமைகள் பிரிய மாட்டேன் என்கிறது. இந்த வீட்டில் நாம் வந்து பிறந்தது எத்தனை பெரிய வேடிக்கை!

அத்தை வழியில் தென்படுகிறாளா என்று கூர்ந்து பார்வையால் துழாவியபடி சாம்பல் பூத்த இருளில் நடந்தான். அங்கங்கே வீடுகளில் வெளிச்சம் தெரிந்தது. அலாரம்



• வாஸந்தி

அடிக்கும் ஓசை கேட்டது. சராசரி டில்லி வீடுகளில் ஒரு நாள் போது எப்படி ஆரம்பிக்கும் என்று அவனுக்குத் தெரியும்.

அநேகமாய் வேலைக்குச் செல்லும் அம்மாக்கள் — அலாரத்தின் ஓசைக்கு எழுந்து, எந்தக் குளிரானாலும் ஏழு மணிக்குள் ஸ்கூல் பஸ்ஸைப் பிடிக்க வேண்டிய தங்கள் பப்ளிக் ஸ்கூல் குழந்தைகளை எழுப்பித் தயார் செய்து, அவசரமாக நாஷ்டா தயாரித்து டிபன் டப்பாக்களில் திணித்து, அந்த அவசரத்திலும் மறக்காமல் 'பைபை' சொல்லும் அம்மாக்கள்... பேப்பர் பையன் லாகவமாக பேப்பர் கற்றை எறியும் ஓசையைக் கேட்ட பிறகு எழுந்திருக்கும் அப்பாக்கள்... டிரெஸ்ஸிங் கவுனில் சிலசமயங்களில் தங்கள் சின்னப் பெண்களுடன் பஸ் ஸ்டாப் வரை துணைக்குச் செல்லும் அப்பாக்கள்... பிறகு ஒன்பது மணிக்குள் வீட்டைப் பூட்டிக் கொண்டு கிளம்பும் ஜோடிகள்....

நிச்சயம் இந்த உலகத்துக்கும் அவன் வீட்டுக்கும் எந்த சம்பந்தமுமில்லை. மைனஸ் மூன்று நான்கு டிகிரி குளிர் சீதோஷ்ணத்தில். காலை நான்கு மணிக்கு எழுந்து, ஐந்தே நிமிடத்துக்குள் 'ஸர்வமங்கள மாங்கல்யே' என்று வலம் வந்து நமஸ்கரிக்கும் வீடு அநேகமாக அவனுடையது மாத்திரமாக இருக்க வேண்





## அருள் வாக்கு

பூர்வ காலங்களில் அசுரர்கள் என்று தனியாக ஒரு இனத்தவர் வருவார்கள். அவர்களை சம்ஹாரிக்க விஷ்ணு ஆயுத பாணியாக வருவார். இந்தக் கலியில் ராக்ஷஸர்கள் தனியாக இல்லை. ஜனங்களின் மூளையிலேயே அசுரன் புகுந்து விட்ட இந்தக் கலியில் யாரை சம்ஹாரம் பண்ணுவது? யாரை விட்டு வைப்பது? எனவே அசுர சம்ஹாரம் இப்போது வேண்டாம் என்று பரமேசுவரன் கருதி, ஞானோபதேசத்துக்காகத் தாமே ஒரு பிராமணக் குடும்பத்தில் அவதரித்தார்.

சம்புவாக உட்கார்ந்திருந்த மூர்த்தி சங்கரராகச் சுற்றும் மூர்த்தியாயிற்று. எவ்வளவுக்கெவ்வளவு உட்கார்ந்திருந்தாரோ அவ்வளவுக்கவ்வளவு சஞ்சாரம் செய்தார். எவ்வளவுக் கெவ்வளவு மௌனமாக இருந்தாரோ அவ்வளவுக் கவ்வளவு பேசினார். உபதேசித்தார்; வாதம் செய்தார்; பாஷ்யம் செய்தார்.

ஸ்ரீ ஆதி சங்கரரின் மகிமை அவருக்கு முன்பிருந்த எழுபத்திரண்டு மதங்களில் எதுவுமே அவருக்குப் பின்பு பாரத தேசத்தில் இல்லாமற்போனது தான். அவர் கண்டனம் செய்த சாங்கியம், வைசேஷிகம் போன்ற சில மதங்களைப் பற்றிப் புத்தகங்களிலிருந்துதான் தெரிந்துகொள்ள முடிகிறது. இவற்றை நடைமுறையில் பின்பற்றுகிற எவரையுமே காணோம். காபாலிகம், வாமாசார சாக்தம் போன்ற கோர மதங்களைப் பற்றிப் பழைய இடிபாடு (Ruirs) புதைபொருள் இவற்றிலிருந்து தெரிந்து கொள்கிறோம். சொற்ப காலத்துக்குள் தத்துவம் ஒன்றையே அடிப்படையாக வைத்து மற்ற மதங்களை யெல்லாம் ஜயித்து அத்வைதத்தை ஆசாரியர்கள் நிலைநாட்டியதைப் போன்ற மகத்தான காரியத்தைச் செய்தவர் உலகில் எவருமே இல்லை.

-ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்

டும். அவன் பார்த்தேயிராத ஸ்வாமிமலைக்கு அருகில் இருக்கும் ஏதோ ஒரு கிராமத்து வீடொன்றின் பிம்பம் அது. வெறும் ஞாபகங்களில் வாழும் வீடு...

அத்தையின் உருவம் அசைந்து வருவது மங்கலாகத் தெரிந்தது. சட்டென்று ஒரு கனிவு அவனுள் சுரந்தது. அவன் விரைந்து சென்று அவளுடைய கையிலிருந்த பால் பாட்டில் பையை வாங்கிக் கொண்டான்.

''கார்த்திகா, நீ ஏண்டா ஒரு நடைக் குளிர்லே வந்தே? அண்ணா விரட்டினானா?''

''ஏன் அத்தை எனக்காகவே நல்ல மனசு இருக்கக் கூடாதா?''

அத்தை சிரித்தாள்.

''இருக்கலாமே? அனுவசியமா அதை எங்கிட்ட இப்பக் காட்ட வேண்டிய அவசியமில்லே. நான் திடமாத்தானே இருக்கேன்? ராத்திரியெல்லாம் கண் முழிச்சுப் படிக்கறே, கார்த்தாலே இந்தக் குளிர்லே எழுந்துண்டு நீ எதுக்கு வரணும்?''

அவன் அப்பா மாதிரி குரலை மாற்றிக் கொண்டு சொன்னான்.

''யார்தான் இந்தக் காலத்தில் படிக்கல்லே? நீங்களெல்லாம் என்னைத் தலைமேலே தூக்கி வெச்சுக்கறேள்!''

விசாலம் மறுபடியும் சிரித்தாள்.

''அண்ணா இப்ப அப்படித்தான் பேசுவான். நாளைக்கே நீ இன்ஜினியர் பட்டம் கிடைச்சு உத்தியோகத்திலே உட்கார்ந்தப்பறம் எப்படி மாறிப்போவான் பாரு!''

கார்த்திக் தன்னைச் சுற்றியும் ஒரு பார்வை பார்த்தபடி நிதானமாய்ச் சொன்னான்.

''அப்பா மாறவே மாட்டார். நான்வேணா எழுதித் தரேன்.''

விசாலம் பதில் ஏதும் சொல்லாமல் யோசனையுடன் நடந்தாள். அத்தை யாரைப் பற்றியும் கடுமையாக விமரிசிக்க மாட்டாள் என்கிற உணர்வுடன் அந்த உணர்வு ஏற்படுத்திய வாஞ்சையுடன் அவளைப் பார்த்தான். பதினெட்டு முழப் புடவையும், வெற்று நெற்றியில் மெலிதாக விபூதிக் கீற்றும், பார்வையில் சாந்தமும் அதரங்களில் புன்னகையும் — அவனுக்கு நினைவு தெரிந்த நாளாக அத்தை இப்படித்தான் இருக்கிறாள். இப்பொழுது குளிருக்காகக் கால்களில் கம்பளி சாக்ஸும் ரவிக்கைக்கு மேல் முழுக்கை ஸ்வெட்டரும் அதற்கு மேல் சால்வையுமாகச் சுமை ஏறியிருந்தது.

''டிரஸ்ஸுதான் மாறும் அத்தை. அதுவும் ஒரு கட்டாயத்தினாலே — வேறே ஒண்ணும் மாறாது.''

விசாலம் சற்று நேரம் எதுவும் பேசாமல் நடந்தாள். பிறகு லேசான புன்னகையோடு கேட்டாள்.

''எதுக்கு மாறணும்?''

கார்த்திக் விசாலத்தின் முதுகில் செல்லமாகத் தட்டிச் சிரித்தான்.

''சபாஷ் அத்தே! நல்ல கேள்வி கேட்டேள். அப்ப நீங்க நின்னுண்டே யிருங்கோ நான் ஓடறேன்!''

''எதுக்கு நான் நிக்கணும்? நான் இந்த மடிசாரோடேயே ஓடுவேனே!''

''நீங்க ஓடுவேள். நான் அப்பாவைப்பத்திச் சொன்னேன். அவர் மனசைச் சொன்னேன். அவருக்கு இந்த வீட்டுக்கும் கோவிலுக்கும் வெளியிலே ஒரு உலகம் இருக்குன்னு தெரியாது.....!''

சாம்பல் நிற இருள் இன்னும் முழுசாக விலகவில்லை. சட்டென்று அவனை ஏறிட்டுப்

பார்த்த விசாலத்தின் கண்களில் கவலை தெரிந்தது.

வீடு வந்து விட்டது. அம்மா மஃப்ளரைத் தலையில் சுற்றிக் கொண்டு ரேழியில் காத்திருந்தாள். வாசலில் கோலம் போட்டு வைத்திருந்தது இப்போது பளிச்சென்று தெரிந்தது.

அவனைக் குற்றம் சாட்டுகிற மாதிரி பார்த்துக்கொண்டே அம்மா படபடத்தாள்.

''இந்தக் குளிர்லே பாலுக்கு நீ போகாதே, விசாலம்!''

''பாலுக்காக நான் போகல்லியே, 'வாக்கிங்'கு போனேன்! பால் பாட்டில் யார் கையிலே இருக்குன்னு பாரு!'' பால் பாட்டிலைச் சமையலறைக்குள் நிலைப்படிக்கு வெளியில் இருந்தபடியே வைத்துவிட்டு உள்ளே திரும்புகையில் கூடத்தில் உட்கார்ந்தபடி மூக்கைப் பிடித்துக் கொண்டு காயத்திரி ஜபம் செய்து கொண்டிருந்த கணேசனின் அதரங்களில் புன்னகை இருப்பதை கார்த்திக் கவனித்தான். அது அத்தையின் பேச்சுக்காக இருக்க வேண்டும். கணேசனின் கருகருவென்ற சுருண்ட கட்டுக் குடுமி இளம் காலை ஒளியில் பளபளத்தது. கண்களில் அத்தையின் சாந்தமும் தேஜஸும் தெரிந்தன. கரணை கரணையான புஜங்களில் ஆரோக்கியம் பளிச்சிட்டது. குணத்திலும் பேச்சிலும் இவன் அநேகமாய் அத்தை மாதிரி என்று கார்த்திக் நினைத்துக் கொள்வான். ஆனால் அத்தையாவது தனது அபிப்பிராயங்களைச் சொல்ல வேண்டிய சமயத்தில் சொல்வாள் பளிச்சென்று. ஆனால் நாசுக்காக. இவன் அதுகூட மாட்டான். இவனுக்கென்று தனிப்பட்ட அபிப்பிராயங்களே கிடையாதோ என்று சில சமயங்களில் கார்த்திக்குக்குக் கோபம் வரும்.

''நான் குருக்கள் வம்சம். இந்தக் கோவிலுக்கு அந்தத் தொழிலுக்காகவே வரவழைக்கப்பட்டவன். இந்தத் தொழில் தான் நீயும் செய்ய வேண்டும் என்று அப்பா விளக்க வேண்டியதற்கெல்லாம் அவசியமே இருக்கவில்லை. 'நான் ஜன்மம் எடுத்ததே அதற்காகத்தான்.' என்கிறாற் போல இவன் வெகு இயல்பாகத் தயாராகிவிட்டான். இவனைப் 'பாலுக்கு ஏன் போகவில்லை' என்று அப்பா விரட்ட மாட்டார். ஏனென்றால் அப்பா குளித்த கையோடு இவனும் குளித்து மடி உடுத்தி அவருடைய பூஜைக்கு உதவ வேண்டும். காப்பி குடித்த உடன் கோவிலுக்குக் கிளம்ப வேண்டும்.

அப்பா காப்பி குடித்து விட்டார் என்று தெரிந்து அவன் சமையலறை வாசலில் செருப்பைக் கழற்றி ஸாக்ஸுடன் உள்ளே நுழைந்தான். விசாலம் குளித்து விட்டு வந்திருந்தாள். அதற்குள்.

● சுஜாதா இதுவரை எழுதிய கதைகளில் வேறுபட்டுச் சற்றும் சுவை குன்றுதாக விளங்கியது. கிராமத்தில் குழப்பங்களையும், விளைவுகளையும் நிஜக் காட்சிகள் போல் எழுதி இருந்தார். இடையில் சொருடைய கடிதங்களால் தொடரை நிறுத்தி விடுவார்களோ என்று பயந்த எனக்கு முடிவுவரை எதுவும் நிகழாதது மன மகிழ்ச்சி அளித்தது.
உளுந்தூர் வெளிகடை ராஜன்

● 'விடிவதற்குள்வா' கதையைக் கலாட்டாவில் ஆரம்பித்துக் 'கவிதையாக' முடித்து விட்டார் சுஜாதா. ஜெயராஜுக்கும் நன்றி.
திருநெல்வேலி எஸ். கணேசன்

● கனகசபையின் சபலம், கிரிஜாவின் வெகுளித்தனம் நிறைந்த நகை ஆசை, மணற்காட்டு மக்களின் அறியாமையால் நிகழ்ந்த சண்டை, தேவகியின் சகோதர பாசம் ஆகியவைகளை அழகாக 'கம்ப்யூட்டர்' மாதிரி விளக்கி, வாராவாரம் விறுவிறுப்பை ஊட்டி வந்தார்.
மன்னார்குடி ஸ்ரீவத்ஸன்

● 'விடிவதற்குள் வா' அழுத்தமான ஒரு பிரச்னையைத் தொட்டுக் காட்டியிருப்பதாகவே கொள்ள முடிகிறது. மத வாதக் காழ்ப்பு உணர்ச்சிகளுக்கு மிரண்டுபோய்—என்று சொல்ல முடியாவிட்டாலும் எதற்கு வம்பு என்கிற பாணியில் இயல்பான 'த்வனி'யை சுஜாதா குறைத்துக்கொண்டிருக்கிறார். இருப்பினும் எழுதப்பட வேண்டிய ஒரு மையக் கருவை வைத்து அழகாகவே எழுதியிருக்கிறார். பாராட்டுகள்.
சென்னை-78 சுப்ரபாலன்

● கதை முடிவதற்குள் கணேஷ்—வஸந்த் வருவார்கள் என்று எதிர்பார்த்தேன். ஆனால் சுஜாதா ஏமாற்றி விட்டார்!
குளச்சல் எம். முகம்மது இப்ராஹிம்

● 'விடிவதற்குள் வா' முடிவதற்குள் வாசகர்கள் அவசரப்பட்டுக் கோபத்தைக் காட்டி விட்டார்கள். ஒரு தனி மனிதனின் பிரச்னை எப்படி சமுதாயப் பிரச்னையாக விசுவரூபம் எடுக்கிறது என்பதை சுஜாதாவைத் தவிர வேறு யாரால் இவ்வளவு நேர்த்தியாகச் சொல்ல முடியும்!
திருமுல்லைவாயில் கலைக்கண்ணன்

● ''மசூதியும், சர்ச்சும், கோவிலும் இருக்கிறவரைக்கும் சண்டை வந்துக்கிட்டுத்தான் இருக்கும்'' என்ற வரிகள் நம் நாட்டு அனைத்து மதத்தினருக்கும் கொடுத்துள்ள மிகப்பெரிய எச்சரிக்கையாகும்.
ஆரணி (வ.ஆ.) இரா. சிவசுப்பிரமணியன்

## வாசகர் கருத்து



''அத்தை பால் வாங்கிண்டு வந்ததற்குக் கூலி கிடையாதா?''

''உண்டே! போனஸ்கூட உண்டு!'' விசாலம் சிரித்துக் கொண்டே வழக்கமான டம்ளரை விடப் பெரிய டம்ளரில் காப்பியைக் கொடுத்தாள்.

அம்மா அடுப்பில் ஏதோ கிளறிக் கொண்டே அதன் போக்கில் சொன்னாள்.

''தள்ளி நில்லுடா! மேலே பட்டுடப் போறே!''

''அத்தே! இதுவும் ஒரு மாறாத கேஸ்!''

''என்னடா?''

''ஒண்ணுமில்லேம்மா! சீக்கிரமா சமையலை முடி. நான் இன்னிக்கு எட்டு மணிக்கே கிளம்பணும்.''

''இப்பவே சாப்பிட வாயேன். சமையல் ரெடி!''

''மாட்டேன். குளிச்சுட்டு மடியாத்தான் சாப்பிடுவேன்.''

அத்தையின் முகத்திலும் கணேசனின் முகத்திலும் தோன்றிய புன்னகையைக் கண்டு திருப்தியுடன், காப்பி குடித்த டம்ளரைக் குழாயடியில் ஜலாக ஜில்லிட்ட நீரில் குழப்பிச் சமையலறையில் வைத்துக் குளித்து விட்டு வருவதற்குள் அப்பாவும் கணேசனும் கோவிலுக்குக் கிளம்பிப் போயிருந்தார்கள்.

அவன் மளமளவென்று தன்னைத் தயாரித்துக்கொள்கையிலேயே படிப்பும் கல்லூரியும் வேறு பல சிந்தனைகளும் மனத்தை ஆக்கிரமிக்க ஆரம்பித்தன. சாப்பிட்டுவிட்டு ஷூவை மாட்டிக் கொண்டு கிளம்பும்போது அம்மா சொன்னாள்:

''இன்னிக்கு சதுர்த்திடா. பிள்ளையார் சன்னிதிக்குப் போயிட்டு காலேஜுக்குப் போ.''

சுர்ரென்று அவனுக்கு எரிச்சல் ஏற்பட்டது. இந்த அம்மா ஏன் சமயா சந்தர்ப்பம் தெரியாமல் எதையாவது சொல்கிறாள் என்று ஆத்திரம் வந்தது.

''நான் எட்டு அஞ்சு பஸ்ஸைப் பிடிச்சாகணும். ஷூவைக் கழற்றிப் பிள்ளையாரைத் தரிசனம் பண்ணிட்டு வரவரைக்கும் டில்லி பஸ்காரன் காத்துண்டிருக்க மாட்டான். இப்போதைக்கு எனக்கு பஸ் டிரைவர்தான் பிள்ளையார்!''

அவன் கிடுகிடுவென்று பதிலை எதிர்பார்க்காமல் ''போயிட்டு வரேன்!'' என்று ஒரு தர்மக் குரல் கொடுத்து வெளியேறும்போது மனத்தை ஒரு சிறு நமைச்சல் அரித்தது. வீட்டை ஒட்டினாற்போல் இருந்தது அந்த அழகிய குன்று. குன்றின்மேல் இருந்தது தமிழ் நாட்டுப் பாணியில் கட்டப்பட்ட முருகன் கோவில். குன்றின் படிகளின் பாதி வழியில் இருந்தது விநாயகர் சன்னதி.

கோவிலை ஒரு விநாடி தயக்கத்துடன் பார்த்து அவன் பஸ் நிலையத்திற்கு விரைந்தான். அவனுக்கு முன்னால் ஒரு நீள க்யூ நின்றிருந்தது. ஜீன்ஸும் குட்டைத் தலைமயிரும், பிடிப்பான ஸ்வெட்டர்களில் கூச்சமில்லாமல் நிமிர்ந்த மார்பகங்களும், சூயிங்கம் மெல்லும் ஜீன்ஸ் இளைஞர்களுமான சமுத்திரத்துடன் கலந்து பஸ்ஸில் அமர்ந்ததும் 'ஓ. இது வேறு உலகம்' என்கிற திகைப்பு அவனை ஆட்கொண்டது.

(தொடரும்)

# கிரேஸி கட்டபொம்மன்

ஓவியர் மணியம் செல்வனும், நாடக ஆசிரியர் கிரேஸிமோகனும் மயிலை கற்பகவல்லி கலா நிலையத்திலும் மயிலை பி. எஸ். உயர்நிலைப் பள்ளியிலும் சேர்ந்து படித்தவர்கள். இருவரும் சந்தித்துப் பேசினார்கள் ம. செ. வீட்டில்.

ம. செ. செ. (மணியம் செல்வனின் செல்வி) சுபாஷிணியின் கண்களில் கொஞ்சம் மிரட்சி. 'அப்பா' என அழைத்தபடி உள்ளே செல்ல, ம. செ. வந்தார்.

ம. செ.: வா,* மோகன்!

மோகன்: என்ன லோகு! (மணியம் செல்வனின் இயற் பெயர் லோகநாதன்) சௌக்கியமா? உன்னோட படங்களைப் பல பத்திரிகைகளில் பாக்கறேன். ரொம்ப நல்லா இருக்கு.

ம. செ: ஏன் மோகன் உனக்கு ஸ்கூல்ல படிக்கறப்போ டிராயிங் ரொம்ப இன்ட்ரஸ்ட் ஆச்சே! இன்னும் கூட வரைஞ்சிக்கிட்டு இருக்கியா?

மோகன்: ஸ்கூல்ல, காலேஜ்ல படிச்சப்போ வரைஞ்சதையெல்லாம் ஃப்ரேம் போட்டு வீட்லே மாட்டி வெச்சிருக்கேன். இப்பத்தான் நாடகம், ஆபீஸ்னு டைம்சரியா இருக்கு. வரையவே நேரம் இல்லே.

ம. செ.: உனக்கு எப்படிடா நாடகம் எழுதறது, மேடைல நடிக்கறது இதிலெல்லாம் இன்ட்ரஸ்ட் வந்தது?

மோகன்: கிண்டி இன்ஜினீரிங் காலேஜ்ல சேர்ந்தேன். அங்கே இன்டர் காலேஜ் லெவல்ல நாடகப் போட்டி நடக்கும். எங்கள் கல்லூரி மாணவர்களுக்காக நான் கால் மணி, அரை மணி நேர ஸ்கிட்கள் எழுதித் தந்தேன். கொஞ்ச நாளைக்கு முன்னால கற்பக வல்லி ஸ்கூல்ல அஞ்சாங் கிளாஸ்ல பாடம் எடுத்த டீச்சர் வந்து என்னோட அலாவுதீனும் 100 வாட்ஸ் பல்பும் நாடகத்தை ஸ்கூல்ல போடணும்னு கேட்டாங்க. நானும் போட்டேன். அந்தச் சமயத்தில இன்னும் பழைய ஆசிரியர்களையும் பார்த்தேன். படிச்ச ஸ்கூல்ல, நாடகம் போட்டப்ப எவ்வளவு சந்தோஷமா இருந்தது தெரியுமா? உன்னைப்பத்திக்கூட நிறையப் பேர் விசாரிச்சாங்க.




ம. செ.: கொஞ்ச நாளைக்கு முன்னாடி உன்னோட நாடகம் ஒண்ணு பார்த்தேன். நல்லாவே நடிக்கறே. கற்பகவல்லி ஸ்கூல்ல படிக்கும் போது 'ஸ்கூல் டே'ல, வீர பாண்டிய கட்ட பொம்மன் நாடகத்துல 'கட்டபொம்மன்' பாத்திரத்துல நடிச்சயே. அப்போ, ''வானம் பொழியுது, பூமி விளையுது! உனக்கேன் வரி!'' என்று தலையில் பெரிய கிரீடத்தையும், இடுப்பில் பெரிய வாளையும்



தூக்க முடியாமத் தூக்கிக் கொண்டு, டய லாக் பேசினியே! ஞாபகம் இருக்கா?

மோகன்: நான் முதல்ல மேடை ஏறின அனுபவத்தை என்னால மறக்க முடியுமா என்ன?

ம. செ.: எட்டாவது படிக்கும்போது சோஷியல் ஸ்டடீஸ் எடுத்தாரே சண்முக சுந்தரம் மாஸ்டர், அவர், சில மாதங் களுக்கு முன்னால தம் மகனை அழைச்சுக் கிட்டு, என் வீட்டுக்கு வந்திருந்தார். 'என் பையனுக்கு புராயிங்ல இன்ட்ரஸ்ட் இருக்கு அதை இம்ப்ரூவ் பண்ண ஏதாவது செய்யணும்னு சொன்னார். நானும் என் னால முடிஞ்ச மட்டும் ஹெல்ப் பண் றேன்னு சொல்லியிருக்கேன். அது சரி, உன் நாடகங்கள்லே ஜோக்கெல்லாம் நிறைய வருதே! முன்னாடியே ஜோக் கெல்லாத்தியும் எழுதி வச்சுக்கிட்டு அங் கங்கே நுழைப்பியா?

மோகன்: நோ...நோ... அப்படியெல்லாம் இல்லே. டயலாக் எழுதும்போதே ஸீனுக்கு ஏற்ப ஜோக் வரும். முதல்ல எழுதும் போது முந்நூறு நானூறு பக்கத்துக்கு எழுதுவேன். அதை ட்ரூப்காரங்களுக்குப் படிச்சுக்காட்டுவேன்; பின் அதைப் பாதியா எடிட் பண்ணுவேன். மறுபடி படிச்சுக் காட்டுவேன்; பின் தேவையான இடங் களில் மாற்றம் செய்து, ஃபைனல் ஷேப் கொடுப்போம்.

ம. செ.: ஏன் நீ ஸீரியஸ் சப்ஜெக்ட்ஸ் டீல் பண்றதில்லே?

மோகன்: காமெடி எழுதறது அவ்வளவு சுலபமல்ல. காமெடி எழுதறவனுக்கு இயற் கையாகவே 'ஸென்ஸ் ஆஃப் ஹ்யூமர்' இருக்கணும்.

ம. செ.: ஆனா, காமெடியிலேயே ஸீரியஸ் னெஸ் கொண்டு வரலாமில்லியா?....

மோகன்: செய்யலாம்... நானும் என் எழுத் தும் வளர ஸீரியஸ்னஸ் வரும்னு நினைக் கிறேன்..... ஹோகு! நீ படம் வரையும் போது பல வகையான உணர்ச்சிகளைப் பிரதிபலிக்கச் செய்யணுமே! அதற்கு என்ன செய்யறே?

ம. செ.: நான் பல வகையான பத்திரிகைகள் ஓவியம், புகைப்பட சம்பந்தப்பட்ட புத்த கங்கள், பல மொழிப் படங்கள் பார்க் கிறேன். அவற்றைத் தக்க சமயத்தில் உப யோகிச்சுப்பேன். உதாரணமா சுஜாதா வுடைய 'ரத்தம் ஒரே நிறம்' கதையில், ஒருவனின் தலையை யானை இடறுவது போன்ற காட்சியில் ஒரு ஆங்கிலப் படக் காட்சி எனக்கு மிகவும் உதவியது. கதா பாத்திரம் ஒன்றின் முகத்தில் பிரதி பலித்த பய உணர்ச்சியை, வண்ணத்தில் தீட்டினேன்.

மோகன்: ஆனால் நீ போடற படங்களில் முகங்கள் ஒரே மாதிரியே இருக்கே இதைத் தவிர்க்கக் கூடாதா?

ம. செ.: இது பொதுவாக எல்லா ஓவியர்கள் மேலும் சொல்லப்படும் குற்றச்சாட்டு. அவரவருக்கு ஸ்டைல் இருக்கிறது. எழுத் தாளருக்கு நடை மாதிரி. அதைப் பார்த்து இப்படிச் சொல்கிறாங்க. இருந் தாலும் என்னிடம் அப்படி ஒரு குறை இருந்தால் திருத்திக்கொள்ளவே முயல் வேன்.

மோகன்: ஸ்கூல்ல படிக்கும்போதே ஒருநாள் ஆசிரியர் எல்லா மாணவர்களையும், 'தன் அப்பாருக்கு என்ன வேலை?' என்று சொல் லச் சொன்னபோது, நீ உன் அப்பாவைப் பற்றிச் சொன்னதும், ஆசிரியர், கல்கியின் எழுத்துக்கள் பற்றியும், அவற்றுக்கு உன் அப்பாவின் படங்கள் பற்றியும் பெருமை யாய்ச் சொன்னது ஞாபகம் இருக்கா?

ம. செ.: இன்னும் அது பசுமையாய் நினைவிருக்கே! நீ படம் போட்டு, என் அப்பா கிட்ட காட்டி, எப்படி இருக்குன்னு கேட்கிறபோதெல்லாம், உன்னை உற்சாகப் படுத்தியும் எனக்கு வரையறதுல விருப்பம் இல்லாதது பற்றியும் அடிக்கடி வருத்தப் பட்டுப் பேசுவாரே!

மோகன்: அவரோட அன்றைய ஆசையைத் தான் இன்று நீ நிறைவேற்றி வெச்சிக் கிட்டிருக்கியே! நான்தான் திசை மாறிட் டேன். (கடிகாரத்தைப் பார்த்துவிட்டு) ஆறரை மணிக்கு ராணி சீதை ஹாலில் நாடகம் இருக்கு. கிளம்பணும். நேர மாகிறது. நீ ஃப்ரீயா இருந்தால் என்னோடு வாயேன்.

(இருவரும் நாடகத்துக்குக் கிளம் பினர்.)

உரையாடல் தொகுப்பு: எஸ். சந்திரமௌலி

புகைப்படம்: ரமணி

முதல் பக்க ஜோக்குகளுக்குக் கார்ட்டூன் வரைந்தவர்: கிரேஸி மோகன்




குமரி மாவட்டம் சுவாமி தோப்பு என்ற இடத்தில் உள்ள ஒரு வக்கீலின் பெயர் பால. ஜனாதிபதி. ஏன் இந்தப் பெயரை வைத்துள்ளீர்கள் என்று கேட் டதற்கு ''வைகுண்ட சுவாமி ஜனங் களுக்கு அதிபதியாக விளங்குவதால் அவர் பெயரை ஏந்தி ஜனாதிபதி என்று வைத்துள்ளேன்'' என்றார்! பிரதமர் என்று யாருக்கும் பெயர் வைக்கப்பட் டுள்ளதோ? இறைவனுக்கே வெளிச்சம்!

-கருங்கல் ஆர். ஜார்ஜ்

''விளையாட்டு என்றாலே எனக்கு... சற்று கூட விருப்பம் கிடையாது'' என்கிறார் பிரபல டென்னிஸ் ஆட்டக்காரர் விஜய் அமிர்தராஜை மணந்து கொண்டுள்ள சியாமளா. ''ஆனால் என் 'விஜய்'யின் வேண்டுகோளின்படி இப்போது டென்னிஸ் பற்றிய எல்லா விஷயங்களையும் கற்றுக் கொண்டு வருகிறேன்'' என்று கூறும் சியாமா (வீட்டில் அப்பா கூப்பிடும்பெயர்) சர்ச்சுக்குப் போய் வேண்டுவதெல்லாம், இந்த வருடம் எப்படியாவது விம்பிள்டனில் விஜய் ஜயிக்க வேண்டும் என்றுதான். 21 வயதான சியாமளாவுக்குப் பிடித்தது பரதநாட்டியம். அடையாறு லட்சுமணனிடம் பரத நாட்டியம் கற்றுக் கொண்டவருக்கு 14 வயதிலேயே அரங்கேற்றம் நடந்து விட்டது.

'தமிழ் பேசும் ஒரு தென்னிந்தியப் பெண்ணை மணந்து கொள்வது என்ற முடிவில்தான் நான் இருந்தேன். ஆனால், சியாமளா தென்னிந்தியாவில் பிறக்கா விட்டாலும் இலங்கையைச் சேர்ந்த தமிழ்ப் பெண் அவள்' என்று கூறும் விஜய் அடிக்கடி தமது நிச்சயதார்த்த மோதிரத்தையும், கழுத்தில் பெண் வீட்டாரால் போடப்பட்ட சிலுவை சேர்க்கப்பட்ட செயினையும் முத்தமிட்டுக் கொள்கிறார். அவைகளைப் பார்ப்பதனால் தமக்குப் புதிய உற்சாகமும், தெம்பும் ஏற்படுகிறது என்கிறார் 28 வயதான விஜய்.

# டென்னிஸ் vs பரதநாட்டியம்



படித்தது கோடைக்கானலில். ''அவரைச் சந்திக்கும்வரை எனக்கு அவரைப் பற்றி எதுவும் தெரியாது. ஆனால் முதல் சந்திப்பிலேயே.....'' என்று வெட்கத்துடன் வார்த்தைகளை முழுங்குகிறார் சியாமா.

விஜய் – சியாமளா முதல் சந்திப்பே சினிமாவில் நடப்பது மாதிரிதான் நடந்தது. இரு குடும்பத்துக்கும் வேண்டிய ஒருவர் இந்தச் சந்திப்பை ஏற்பாடு செய்திருந்தார். விஜய் தமக்குக் கிடைத்த மிகக் குறைந்த நேரத்தில் சென்னைக்கு வந்தார். போன பிப்ரவரியில், குடும்ப நண்பர் ஏற்பாடு செய்த விருந்தில் விஜய்யும் சியாமளாவும் சந்தித்துக் கொண்டனர். கிட்டத்தட்ட ஒரு வருடம் ஆன பிறகு கல்யாணம் இப்போது நடந்திருக்கிறது. இடையில் சமயம் கிடைக்கும்போதெல்லாம் விஜய் கொழும்புக்கு (அங்குதான் சியாமளா வசித்து வந்தார்) சென்று வந்து கொண்டிருந்தார்.

பணத்தைப் பொறுத்த மட்டில் விஜய்க்குக் கவலையே கிடையாது. 1981ம் வருடம் மட்டும் வருமானம் சுமார் 30 லட்சம் ரூபாய்.

புதிதாக லாஸ் ஏஞ்செல்ஸில் வாங்கியுள்ள வீட்டில் தமது மண வாழ்க்கையை ஆரம்பிக்கப் போகும் விஜய் தமது உடம்பை விளையாட்டுக்கு ஏற்றபடி வைத்துக்கொள்ள, தினமும் காலையில் வெகு தூரம் ஓடுவாராம். பிறகு யோகாசனம்.

டென்னிஸ் விளையாடுவதைத் தவிர 'ஆக்டோபஸ்ஸி' என்ற திரைப்படத்தில் தற்போது நடித்துக் கொண்டிருக்கும் விஜய்க்கு மேலும் திரைப்படங்களில் நடிக்க சான்ஸ் வரலாம்.

- தில்லப்பா நன்றி: 'வீக்'

''டாக்டர் மாப்பிள்ளை டிஸ்பென்சரி கட்டித் தந்தால்தான் ஆச்சு என்று பிடிவாதம் பிடித்தார்.''

''அதுதான் கட்டிக் கொடுத்து விட்டீர்களே. இன்னமும் என்ன கவலை?''

''இப்போ தினமும் பத்து நோயாளிகளை அனுப்பினால்தான் ஆச்சு என்று பிடிவாதம் பிடிக்கிறார்!''

—லலிதா செல்லப்பா



வட்டமேஜை

# வடக்கிருக்கிறாரா விநாயகர்?



● இந்திரா அலை ஓய்ந்து போனதா? தலையங்கம் பொங்கல் மலரில் தலைசிறந்த அம்சமாகத் திகழ்ந்தது.

புதுவை-1 இரா. தீபன்வேலு

● ஏனய்யா காய்கறிகளின் விலைகளைமறந்து 'கல்கி' படிக்கலாம் என்று எடுத்தால் 'தமாஷ் பரீட்சை மூலம் மீண்டும் நினைவுபடுத்தி எங்கள் வயிறெரிச்சலைக் கொட்டிக் கொள்ள வேண்டுமா?

திருச்சி-17 எந்தல் ஆர். இளங்கோ

● வாசகர்களாகிய நாங்கள் கேள்வி கேட்கத் துடித்துக் கொண்டிருந்த நேரத்தில் அன்பழகனிடம் நீங்கள் கேட்ட கேள்விகள் அருமை. அதிலும் அவர் மழுப்பாமல் நழுவாமல் முறையாகச் சரியான பதிலைக் கூறி தி. மு. க. தொண்டர்கள் வயிற்றில் பால் வார்த்து விட்டார்.

மேட்டுப்பாளையம் ஆனந்தி மு. கலியாண சுந்தரம்

● காஞ்சிப் பெரியவாளின் பவழ விழாவை கணக்கற்ற உள்ளங்கள் காணமுடியாது போன குறையைக் கல்கி தனது பவழ விழா கட்டுரையில் தீர்த்து வைத்து விட்டது.

திருபுவனை செல்வி கு. புவனா குருமூர்த்தி

● தங்கள் பொங்கல் பரிசுக்கு மிக்க நன்றி. பதின்மூன்று பக்கங்களில் 23வருடக் கதையை டிவைட் செய்து சவிதா தந்த குறுநாவல் 'பரிசை'த்தான் சொல்கிறேன்.

மதுரை பால கோவிந்தராஜ்

● சவிதாவின் டிவைடர் கதை ஓர் அற்புதமான படைப்பு. பெற்ற தாயையே கொன்ற அந்தக் கணேஷிற்கு எந்தத் தண்டனை அளித்தாலும் என் ஆத்திரம் தீராது.

புதுச்சேரி-1 இ. உமாபதி ராஜா

● குதிரைகளை இரும்பாக்கினதால் தானோ என்னவோ விநாயகர் கோவிலை வடக்கிருக்கச் செய்துவிட்டார் பாலகுமாரன். கேள்விப்பட்டது இல்லையே!

சென்னை-14 ஐயாறு எஸ் வாசுதேவன்

● 16—1—83 கேள்வி-பதில் பகுதியில் "கார்த்திகேயன் (கர்நாடக டி.ஐ.ஜி.) காரியங்கள் தவறுணவையாலதால் அது பற்றி வாய் திறந்தால் வம்பில் மாட்டிக் கொள்வார் மாநில முதல்வர்" என்று கூறியிருக்கிறீர்கள். 'டி.ஐ. ஜி. கார்த்திகேயனை அரசியலில் கலந்தது நான்தான். நான் கூறியதை வைத்துத் தான் கார்த்திகேயன் கட்சிக்காக உழைக்க ஆரம்பித்தார்' என்று முன்னாள் மாநில முதல்வர் குண்டு ராவ் வாய் திறந்து கூறியிருப்பது பத்திரிகைகளில் வந்திருக்கிறது.

சென்னை-5 எஸ். வி. ராஜசேகர்

(அவ்விதழ் கேள்வி பதில் பகுதி எழுதப்பட்ட பின் வாய்திறந்து குண்டுராவ் வம்பில் மாட்டிக் கொண்டிருக்கிறார். -ஆசிரியர்.)

● இசைத் துக்கடா கார்டூனில் (9-1-83 இதழ்) உள்ள ரசிகர் திரு யக்ஞராமனுக்கு நன்றி சொல்வதை விட அவ்வாறு அவரை முன்னுக்குக் கொண்வரத் திரு யக்ஞராமனைத் தூண்டிய மின்சாரத் தட்டுப்பாட்டிற்குத்தான் முதலில் நன்றி கூற வேண்டும்.

மதுரை கே.வி.ஆர்.எஸ். மணி

● சென்னையிலிருந்து வெளிவரும் 'மன ஓசை' என்ற பத்திரிகையில் எனது புனைபெயரைப் பயன்படுத்தி ஆட்சேபகரமான கதைகளும் கட்டுரைகளும் வெளி வருகின்றன. ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் குறித்தும், திரு. நா. பா. திரு. ஜெயகாந்தன் திரு நா. காமராசன் போன்றோர் பற்றியும் அவர்கள் சிறப்பினை இழிவு படுத்தும் வகையில் எழுதப்படும் இக்கட்டுரைகளுக்கு நான் பொறுப்பாளியல்ல.

பள்ளிகொண்டா வையவன்

## கணேசா

சுமத்ரா தீவில் யானைகள் வம்சம் அற்றுப் போகாமல் இருக்க அவைகளை காடுகளுக்குள்ளே ஓட்டி விடுவதற்காக இந்தோனேஷிய அரசு நியமித்த ராணுவப் படைப் பிரிவுக்குத்தான் 'கணேசா' என்று பெயர்! இந்தோனேஷியா ஒரு முஸ்லிம் நாடு. என்றாலும் அந்நாட்டு ஏர்லைன்ஸுக்கு 'கருடா' என்றும் அந்நாட்டு ரிசர்வ் பாங்கிற்கு 'குபேரா' என்றும் பெயரிடப்பட்டிருக்கிறது.

—வசந்தா மகாதேவன்



## ஆரோக்கியம், ஆனந்தம், ஒன்றுக்கொன்று ஆதாரம்!
## போர்ன்விடா பருகுங்கள்.

உங்கள் குடும்பத்தினருக்கு
இன்சுவைமிக்க காட்பரிஸ்
போர்ன்விடா வழங்குங்கள்.
கோகோ, மால்ட், பால்
மற்றும் சர்க்கரையின்
நற்பண்புகள் நிறைந்துள்ளது,
போர்ன்விடா— உங்கள்
குடும்பத்தினருக்கு அன்றாடம்
இருவேளை வழங்குங்கள்.




OBM/8844/TM

*காட்பரிஸ்*
**போர்ன்விடா** உங்களோடு வளரும் நன்மை

# கள்வனின் காதலி



அமரர் கல்கி

## அத்தியாயம் 29
## ராவ் சாகிப் உடையார்

ராவ் சாகிப் சட்டநாத உடையார் ராயவரம் தாலூகாவில் ஒரு பெரிய பிரமுகர். முனிசிபல் கவுன்சிலர், ஜில்லா போர்டு மெம்பர், தேவஸ்தானக் கமிட்டி பிரஸிடெண்ட் முதலிய பதவிகளைத் திறமையுடன் தாங்கிப் புகழ் பெற்றவர். இம்மாதிரிப் பொது ஸ்தாபனத் தேர்தல்களில் ஈடுபட்ட அநேகர் அந்தத் தாலூகாவில் வெகுவாகச் சொத்து நஷ்டமும், கஷ்டமும் அடைந்திருக்க இவர் மட்டும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக மேலோங்கி வந்தார். இவருடைய செல்வமும் செல்வத்தைப் போல் செல்வாக்கும் நாளுக்கு நாள் வளர்ந்து வந்தன. இதற்குக் காரணம், அவர் பிறந்த வேளை என்றார்கள் சிலர். ''மகா கெட்டிக்கார மனுஷன். வாயைப் போல் கை; கையைப் போல் வாய்'' என்றார்கள் வேறு சிலர். ''ஆசாமி திருடன், ஸ்தல ஸ்தாபனங்களைக் கொள்ளையடித்தும், கோவில்களைச் சுரண்டியுமே இப்படிப் பணம் சேர்த்து விட்டான்'' என்றனர் வேறு சிலர். இன்னும் பலர் பலவிதமாகச் சொன்னார்கள்.

அன்றைய தினம் உடையார் ராயவரம் டவுனை அடுத்துச் சாலை ஓரத்தில் பெரிய தோட்டத்தின் மத்தியில் கட்டியிருந்த தமது புதிய பங்களாவில் டிராயிங் ரூமில் உட்கார்ந்து தினசரிப் பத்திரிகைகளுக்கு ஒரு கடிதம் எழுதிக் கொண்டிருந்தார். உடையார் அவ்வளவு பிரபலமாகித் தமது செல்வாக்கை வளர்த்துக்கொள்ளக் காரணமாயிருந்த வழிகளில் இது ஒன்றாகும். அடிக்கடி அவர் பத்திரிகைகளுக்குக் காரசாரமான கடிதங்கள் எழுதிக் கொண்டிருப்பார். சர்க்கார் விவசாய இலாகா கவனிக்க வேண்டிய காரியங்களிலிருந்து சர்வதேச சங்கம், உலக யுத்தத்தைத் தடுப்பதற்காகச் செய்ய வேண்டிய காரியங்கள் வரையில் அவர் சகல விஷயங்களையும் பற்றிப் பிய்த்து வாங்கி எழுதும் சக்கையான கடிதங்கள் வாரம் இரண்டு தடவை யாவது பத்திரிகைகளில் வெளியாகிக் கொண்டிருக்கும். அம்மாதிரியாக அன்றைய தினம் அவர் எழுதி முடித்த கடிதத்தை இதோ கீழே படியுங்கள்:

''மகா-ா-ா-ஸ்ரீ பத்திரிகாசிரியர்



அவர்களுக்கு,

ஐயா!

இந்தக் கொள்ளிடக்கரைப் பிரதேசத்தில் முத்தையன் என்னும் துணிச்சலுள்ள திருடனின் அட்டகாசங்கள் நாளுக்கு நாள் அதிகமாகியே வருகின்றன. சமீபத்தில் கோவிந்தநல்லூரில் நடந்த பிரபல விவாகத்தின்போது, அவன் செய்த சாகசச் செயல்களினால் இந்தத் தாலூகா முழுவதும் கதிகலங்கிப் போயிருக்கிறது. ஜனங்கள் தங்கள் சொத்துக்கும் உயிருக்கும் எந்த நிமிஷத்தில் ஆபத்து வருமோ என்று சதாசர்வ காலமும் வயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டு வாழ்ந்து வருகிறார்கள்.

நேற்றைய தினம் முத்தையனிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. அதில் அவன் என்னுடைய வீட்டுக்கு ஒரு நாள் விருந்தாளியாக வரப் போவதாகவும், வரவேற்புக்கு ஏற்பாடு செய்யும்படியும் எழுதியிருக்கிறான்.

திருடன் ஒருவனுக்கு இவ்வளவு தைரியமும் துணிச்சலும் ஏற்படுவதற்குக் காரணம் புருஷர்களாயிருக்கும் இந்தத் தாலூகா போலீஸ்காரர்களின் சாமர்த்தியத்தை ஜனங்கள் பெரிதும் பாராட்டுகிறார்கள்! கூடிய சீக்கிரத்தில் அவர்கள் எல்லோருக்கும் தக்க 'பிரமோஷன்' கொடுக்க வேணுமாய் ஜனங்கள் கோருகிறார்கள்!

இப்படிக்கு,

ராவ் சாகிப்

கே. என். சட்டநாத உடையார்''

உடையார் மேற்படி கடிதத்தை எழுதி முடித்து உறையில் போட்டுக் கொண்டிருக்கையில், ஒருவன் உள்ளே வந்து, ''எஜமான்! அந்த ஆசாமி வந்திருக்கிறான்'' என்றான். உடையாரின் முகத்தில் ஒருசிறிது திகிலின் சாயை காணப்பட்டது. அதை அவர் உடனே மாற்றிக் கொண்டு, ''வரச் சொல்லு. இங்கு வேறு யாரையும் உள்ளே விடாதே. தலைபோகிற காரியமானாலும் சரிதான்!'' என்றார்.

அவன் போனவுடன் உள்ளே வந்தவன் வேறு யாரும் இல்லை; முத்தையன் தான். முகமூடித் திருடனாய் வராமல் சாதாரண முத்தையனாய் இப்போது வந்தான்.

வந்தவன், ''குட்மார்னிங் சார்!'' என்று சொல்லிவிட்டு நின்றான்.

உடையார் அவனைச் சற்று நேரம் அதிசயத்துடன் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். ''அடே அப்பா! இவ்வளவுண்டு இருந்து கொண்டு என்ன

வெல்லாம் அமர்க்களம் செய்து வருகிறாயடா!'' என்றார்.

''உடையார்வாள்! கொஞ்சம் மரியாதையாகவே பேசிவிட்டால் நல்லதில்லையா?'' என்றான் முத்தையன்.

''அப்படியே யாகட்டும், ஸார்! உட்காருங்கள் ஸார்! தங்களை இங்கு விஜயம் செய்யச் சொன்னது எதற்காக என்று ஏதாவது தெரியுமா ஸார்!'' என்று ராவ் சாகிப் கேட்டார்.

''உங்கள் ஆள் எனக்கு அதெல்லாம் சொல்லவில்லை. நீங்கள் என்னுடைய முகத்தைப் பார்ப்பதற்கு ரொம்ப ஆவலாக இருப்பதாய் மட்டும்தான் சொன்னான். ஆனால் காரியமில்லாமல் தாங்கள் அப்படியெல்லாம் ஆசைப்பட மாட்டீர்கள் என்று எனக்குத் தெரியும்'' என்றான் முத்தையன்.

உடையார் சற்று யோசனை செய்தார். அவனிடம் எப்படி விஷயத்தைப் பிரஸ்தாபிப்பது என்று அவர் தயங்குவது போல் காணப்பட்டது. அப்போது முத்தையன் அவரைத் தைரியப்படுத்துகிற பாவனையாக, ''என்ன யோசிக்கிறீர்கள்! தாராளமாகச் சொல்லுங்கள். **'திருடர்களுக்குள் ஸங்கோசம் என்ன?''!** என்றான்.

உடையார் திடுக்கிட்டு, ''என்ன அப்படிச் சொல்கிறாய்?'' என்றார்.

''ஆமாம்; அதைப் பற்றி என்ன? நான் வெறுந் திருடன்; தாங்கள் மிஸ்டர் திருடர். அவ்வளவுதான் வித்தியாசம், பரவாயில்லை, சொல்லுங்கள்.''



கண்ணன்: ஔவையார் படத்தை இன்று பாரதிராஜா எடுத்தால் என்ன பெயர் வைப்பார்?
முரளி: 'வாலிபமே போ...போ...'

-லலிதா செல்லப்பா

''எல்லோரும் உன்னைப்பற்றிச் சொல்வது சரியாய்த்தானிருக்கிறது. வெகு வேடிக்கை மனுஷனாயிருக்கிறாய். இருக்கட்டும். உன்னைக் கூப்பிட்ட காரியத்தைச் சொல்கிறேன். என் சிநேகிதர் ஒருவருக்குப் புதுச்சேரியிலிருந்து இரகசியமாகக் கொஞ்சம் சரக்கு கொண்டுவரவேண்டுமாம். அதற்கு உன் ஒத்தாசை வேண்டும் என்கிறார். இதிலே எனக்கு ஒரு சம்பந்தமும் கிடையாது. உனக்குச் சம்மதமானால் சொல்லு. அபாயம் அதிகம்தான்; வரும்படியும் அதற்குத் தகுந்தபடி ஜாஸ்தி. என்ன சொல்லுகிறாய்?''

இதைக் கேட்ட முத்தையன் வாயைக் கையினால் மூடிக் கொண்டு விழுந்து விழுந்து சிரித்தான். இடையிடையே உடையாரையும் பார்த்தான்.

உடையார் தமது ஆடை அலங்காரங்களில் அதிகக் கவலையுள்ளவர். அவற்றில் ஏதாவது கோளாறு என்ன என்று அவர் கவரிலிருந்த நிலைக்கண்ணாடியில் தம்மைப் பார்த்துக் கொண்டார்.

முத்தையன், ''அலங்காரமெல்லாம் சரியாய்த்தான் ஸார் இருக்கிறது. ஒன்றும் பிசகில்லை. நான் சிரிக்கிறது வேறு விஷயம். ஐந்தாறு வருஷத்துக்கு முன்னால், இந்த மாதிரி திருட்டு வேலைக்காக என்னை நீங்கள் கார் ஓட்டச் சொன்னீர்கள். நான் மாட்டேன் என்றேன். அதற்காக என்னை டிஸ்மிஸ் பண்ணி விட்டீர்கள். அப்போதும் இதே மாதிரிதான் 'ஒரு சிநேகிதருக்காக! இதில் எனக்கு ஒரு சம்பந்தமும் இல்லை' என்று சொன்னீர்கள். அதெல்லாம் ஞாபகம் இருக்கிறதா?'' என்று கேட்டான்.

உடையார் குதித்து எழுந்தார். ''அடே பாவிப் பயலே! நீதானா?'' என்றார். பிறகு அவர் நின்றபடியே கூறினார்.

''உன்னைக் கோவிந்தநல்லூர் கல்யாணத்தில் ஒரு நிமிஷம் பார்த்தபோதே நீயாய்த்தான் இருக்க வேண்டும் என்று சந்தேகப் பட்டேன். அதனால்தான் உன்னை எப்படியாவது கூட்டிக் கொண்டு வரச்சொல்லி யிருந்தேன். ஜில்லென்று மீசை வைத்துக் கொண்டு விட்டாய் அல்லவா? அதனால் நிச்சயமாக அடையாளம் தெரியவில்லை. போகட்டும்! அப்போது வெகு யோக்கியன் மாதிரி திருட்டுப் புரட்டிலே இறங்க மாட்டேன் என்று சொன்னாயே? இப்போது என்ன ஆயிற்று? பெரிய பக்காத் திருடனாய் ஆகிப்போனாய். என்னோடு இருந்திருந்தால் உனக்கு அபாயமே கிடையாது. இப்போது நித்ய கண்டம் பூர்ணாயுசா யிருக்கிறாய். நான் சொல்கிற

தைக் கேள். இப்போதாவது என்னோடு சேர்ந்துவிடு. நான் ஒருவிதத்திலே சூரனாயிருந்தால், நீ இன்னொரு விதத்தில் சூரன். நாம் இரண்டு பேரும் சேர்ந்து வேலை செய்தோமானால் உலகத்தையே விலைக்கு வாங்கி விடலாம். என்ன சொல்கிறாய்?'' என்றார்.

''ஆமாம். அதெல்லாம் எனக்குத் தெரியும். இப்போது இப்படிச் சொல்வீர். சமயத்தில் கழுத்தை அறுத்து விடுவீர். என்னைக் காட்டிக் கொடுத்து விட்டு, நீர் மேலே அழுக்குப் படாமல் தப்பித்துக் கொள்வீர். உத்தியோகஸ்தர்களுக்கே உம்மைக் கண்டால் பயம். அவர்கள் யாராவது முறைத்தால், மேலே ஹோம் மெம்பர் வரையில் உம்முடைய கட்சி. எப்படியாவது தப்பித்துக்கொண்டு விடுவீர். நான் பலியாக வேண்டியதுதான். ஆனால் அதற்கெல்லாம் இப்போது நான் துணிந்த கட்டை. ஒரு தடவை பாண்டிச்சேரி போய் வந்தால் என்ன கொடுப்பீர்? சொல்லும் பார்க்கலாம்!''

''முழுசாய் ஒரு நோட்டு. ஆயிரம் ரூபாய் தருகிறேன்.''

''சீ; இதுதானா? நான் இப்போது வந்ததற்குப் பதிலாக உம்முடைய வீட்டிற்கே ராத்திரி வந்தேனானால் அடிக்கு அடியில் ஐயாயிரம் ரூபாய் கொண்டு போய் விடுவேன்!''

இதைக் கேட்டதும் சட்டநாத உடையார் இடுக்கிட்டார்.

''தீட்டிய மரத்திலேயே கூர் பார்ப்பாய் போலிருக்கிறதே!'' என்றார்.

''பயப்பட வேண்டாம், உடையார்! அப்படியெல்லாம் செய்ய மாட்டேன். திருடன் வீட்டில் திருடன் புகுவது தொழில் முறைக்கு விரோதமல்லவா? போகட்டும்; நான் உமக்கு உதவி செய்கிறேன். உம்மால் எனக்கும் ஒன்று ஆகவேண்டியதாயிருக்கிறது. உம் வேலையெல்லாம் முடிந்த பிறகு எனக்கு ஒரு மோட்டார் வண்டி நீர் கொடுக்க வேண்டும். நான் ஒரு தடவை சென்னைப்பட்டணம் போய் வர விரும்புகிறேன்'' என்றான் முத்தையன்.

உடையார் சற்று நிதானித்து, ''ஆகட்டும்; பார்க்கலாம்'' என்றார்.

## அத்தியாயம் 30
## வஸந்த காலம்

மறுநாள் உச்சிப் போதில், ஜலம் வறண்ட ராஜன் வாய்க்காலின் மணலில் இரு புறமும் அடர்த்தியாய் வளர்ந்திருந்த புன்னை மரங்களின் நிழலில் முத்தையன் மேல் துணியை விரித்துக்

அவர்: உங்க பேச்சைக் கேட்கிறப்பதான் நான் இரண்டு காதுகள் பெற்றதோட முழுப் பயனையும் அனுபவிக்கிறேன்.
இவர்: அவ்வளவு நல்லாவா பேசறேன்?
அவர்: அதில்லீங்க! ஒரு காதிலே வாங்கி மறு காதிலே விட்டுடறேன்!''
—எஸ். அன்புமணி



கொண்டு படுத்திருந்தான். அப்போது இளவேனிற் காலம். சித்திரை பிறந்து சில நாட்கள்தான் ஆகியிருந்தன. மரம் செடி கொடிகள் எல்லாம் தளதளவென்று பசும் இலைகள் தழைத்துக் கண்ணுக்குக் குளிர்ச்சியளித்தன. அவற்றின் மேல் இளந் தென்றல் காற்று தவழ்ந்து விளையாடிக் கொண்டிருந்தது. சற்றுத் தூரத்தில் ஒரு வேப்ப மரம் பூவும் பிஞ்சுமாய்க் குலுங்கிக்கொண்டிருந்தது. அதிலிருந்து வந்த மனோகரமான வாசனையை முத்தையன் நுகர்ந்து கொண்டிருந்தான். அந்த மரத்தின் அடர்த்தியான கிளைகளில் எங்கேயோ ஒளிந்து கொண்டு ஒரு குயில் 'சுக்கூ' 'குக்கூ' என்று கூவிக் கொண்டிருந்தது.

சென்ற சித்திரைக்கு இந்தச் சித்திரை ஏறக்குறைய ஒரு வருஷ காலம் முத்தையன் இந்தப் பிரதேசத்தில் திருடனாகப் பதுங்கி வாழ்ந்து காலம் கழித்தாகி விட்டது. அந்த நாட்களில், இரண்டு பெரிய தாலூக்காக்களிலுள்ள ஜனங்களெல்லாம் தன்னுடைய பெயரைக் கேட்ட மாத்திரத்தில் கதி கலங்கும் படியும் அவன் செய்திருந்தான். அத்தகைய பிரதேசத்தை விட்டு இப்போது ஒரேயடியாகப் போய் விடப் போகி

ரேம் என்பதை எண்ணியபோது அவனுக்கு ஏக்கமாய்த்தான் இருந்தது.

மேற்படி தீர்மானத்துக்கு அவன் வந்து சில தினங்கள் ஆகி விட்டன. திருடப் போன வீட்டில் எதிர்பாராதபடி கல்யாணியைச் சந்தித்து, அதனால் சொல்ல முடியாத அவமானமும், வெருட்சியும் அடைந்து, ஒரு வார்த்தை கூடப் பேசாமல் பேயைக் கண்டவன் போல் திரும்பி ஓடினான் என்று சொன்னோமல்லவா? போலீஸ் லாக்கப்பிலிருந்து தப்பிய அன்று எப்படி வழி திசை தெரியாமல் ஓடினானோ அதே மாதிரிதான் இன்றும் ஓடினான். கடைசியாக எப்படியோ தன்னைச் சென்ற ஒரு வருஷமாக ஆதரித்துக் காப்பாற்றி வரும் கொள்ளிடக் கரைப் பிரதேசத்தை அடைந்தான். இரவுக்கிரவே ஆற்றைத் தாண்டி அக்கரை படுகைக்கும் வந்து விட்டான். அந்த இரவிலேயே அவன் தன் வருங்காலத்தைப் பற்றிச் சிந்திக்கவும் தொடங்கினான். இனி வெகு காலம் இப்படியே காலம் தள்ள முடியாது என்று அவனுக்கு நிச்சயமாகி விட்டது. போலீஸ் பந்தோபஸ்துகள் நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டு வந்தன. எப்படியும் ஒரு நாள் பிடித்து விடுவார்கள். அப்படிப் பிடிக்கா விட்டாலும் இவ்வாறு நிர்ப்பயமாய் வெகு காலம் நடமாட முடியாது என்று அவனுக்குத் தோன்றி விட்டது. கல்யாணியைப் பார்க்கும் ஆசைதான் அவனை இத்தனை காலமும் அந்தப் பிரதேசத்தில் இருத்திக் கொண்டிருந்தது. அந்த ஆசை இவ்வளவு விபரீத முறையில் நிறைவேறவே, முத்தையன் மனங் கசந்து போனான்.

தான் இதுவரை சேர்த்து வைத்திருந்த பணத்தை எடுத்துக் கொண்டு எங்கேயாவது அக்கரைச் சீமைக்குக் கப்பல் ஏறிப் போய் விடுவதென்று அவன் தீர்மானித்தான். அதற்கு முன்னால், சென்னைக்குப் போய் அபிராமியை எப்படியாவது ஒரு தடவை பார்த்துவிட வேண்டும் என்ற ஆசையும் அவனுக்கு இருந்தது. ஆனால் இதெல்லாம் எப்படிச் சாத்தியமாகும்?

இதைப் பற்றி யோசனை செய்து கொண்டிருந்தபோதுதான், ராயவர உடையார் தன்னைப் பார்க்க விரும்புவதாகத் தகவல் தெரிவித்திருந்தது அவனுக்கு ஞாபகம் வந்தது. அவர் வரச் சொன்னது எதற்காக இருக்கும் என்பதை அவன் ஒருவாறு ஊகித்திருந்தான். அவருடைய யோக்கியதையை முன்பே அறிவானாதலால், அவரால் அபாயம் ஏற்படும் என்று அவன் சிறிதும் பயப்படவில்லை. ஆனால் அந்தத் திருடனுக்குப் போய் உதவி செய்வதில் அவனுக்கு இஷ்டமில்லாமலிருந்தது. அதனால் தனக்கு முடிவில் நன்மை ஏற்படாது என்று அவனுடைய உள்ளத்தில் ஏதோ ஒன்று சொல்லிற்று.

ஆனால் இப்போது கப்பலேறிப் போய்விட வேண்டும் என்ற ஆசை பிறந்ததும், உடையாருடைய ஒத்தாசையினால்தான் அது சாத்தியமாகக் கூடும் என்று அவன் தீர்மானித்தான். அதனால்தான் அவரை அவன் போய்ப் பார்த்ததும் அவருடைய 'கங்கத் திருட்டு' வேலைக்கு உதவி செய்வதாக ஒப்புக்கொண்டதும், அதற்குப் புறப்பட வேண்டிய நாள் வரையில் கொள்ளிடக் கரைப் பிரதேசத்தில் இருப்பதே யுக்தமென்றும் அதுவரை எவ்வித சாகஸமான காரியத்திலும் இறங்குவதில்லையென்றும் முடிவு செய்து, அந்தப்படியே நிறைவேற்றி வந்தான். ஆகவே



**மருத்துவத்தில் இன்று...**

நீரிழிவு நோயைக் கட்டுப்படுத்த அமெரிக்க டாக்டர்கள் ஒரு புது முறையைக் கையாள்கிறார்கள். உடலில் பெல்ட்டில் அணியப்படும் ஒரு 'பம்ப்' இன்ஸுலினைச் சரியான அளவில் இடைவெளியின்றி ரத்தத்தில் கலக்கச் செய்கிறது. பாட்டரியால் இயங்கும் இந்தப் பம்பிலிருந்து வெளிவரும் 'டியூப்' அளவில் உள்ள இன்ஜெக்ஷன் ஊசி தோல் பரப்பின் அடியில் செருகப்படுகிறது. இரண்டு நாளைக்கொரு தரம் ஊசியையும் அது செருகப்படும் இடத்தையும் நோயாளி தானே மாற்றிக் கொள்ளலாம். ரத்தத்தில் சர்க்கரைச் சத்தின் அளவை நோயாளியே கணிக்கிறார். விரல் நுனியைக் குத்தி ஒரு சொட்டு ரத்தத்தை ரசாயனத் தாளில் வைத்து நிற மாற்றத்தை யொட்டி அளவிடுகிறார். அதையொட்டி பம்ப் மூலம் செலுத்தப்படும் இன்ஸுலின் அளவையும் கூட்டிக் குறைத்துக் கொள்ளலாம்!

கொஞ்ச நாளாக அவனுடைய சந்தடி அடங்கியிருந்தது.

* * *

இன்று, ராஜன் வாய்க்கால் மணலில் படுத்துக் கிடந்தபோது, அவனுக்கு மறுபடியும் கல்யாணியின் ஞாபகம் வந்தது. அவளுடைய நினைவைத் தன் மனத்தில் வளர்த்துக் கொண்டு வந்ததே பெரும் பிசகென்றும், அவளை மறந்துவிடத்தான் வேண்டுமென்றும் அவன் தீர்மானித்திருந்தானாயினும், அவனையறியாமலேயே அவனுடைய உள்ளம் அவள்பால் சென்றது. அன்று இரவு அவளைப் பார்த்தபோது ''முத்தையா! என் நகைகள்தானா உனக்கு வேண்டும்?'' என்று அவள் சொன்ன வார்த்தைகள் திரும்பத் திரும்ப அவனுடைய நினைவுக்கு வந்தன. அவ்வார்த்தைகளின் பொருள் என்ன என்று அறிய அவன் தாபம் கொண்டான். அவள் ஏன் அவ்வீட்டில் தன்னந் தனியாக ஒரு கிழவியுடன் மாத்திரம் இருந்தாள் என்பதை நினைக்கும்போது அவனுக்கு வியப்பாக இருந்தது. ''ஐயோ! ஒரு நிமிஷம் அவள் முகத்தை நன்றாய்ப் பார்த்துவிட்டு, ''சௌக்கியமாய் இருக்கிறாயா?'' என்று ஒரு வார்த்தை கேட்டுவிட்டுத்தான் வந்தோமா?'' என்று அவன் மனம் ஏங்கிற்று.

இப்படியெல்லாம் நினைக்க நினைக்க அவனுடைய மனத்தில் திடீரென்று ஓர் ஆசை எழுந்தது. தானும் கல்யாணியும் குழந்தைப் பருவம் தொட்டு ஓடி விளையாடி எத்தனையோ நாள் ஆனந்தமாய்க் காலம் கழித்த அந்தப் பாழடைந்த கோவிலை ஒரு தடவை பார்க்க வேண்டும் என்பதுதான் அந்த ஆசை. கல்யாணியின் கல்யாணத்துக்கு முன்பு அவளைத் தான் கடைசியாகப் பார்த்த இடமும் அதுவேயல்லவா? அன்று அவள் 'ஏன் வந்தேனென்று கேட்கிறாய்? வேறு எதற்காக வருவேன்? உன்னைத் தேடிக் கொண்டுதான் வந்தேன்' என்று கண்ணில் நீர் ததும்பக் கூறிய காட்சி இப்போது அவனது மனக்கண் முன்னால் நின்றது. இந்தப் பிரதேசத்தை விட்டுத் தான் அடியோடு போவதற்கு முன்பு, அந்தக் கோவிலை இன்னொரு தடவை பார்த்துவிட வேண்டும் என்று எண்ணினான். இந்த எண்ணம் தோன்றிச் சிறிது நேரத்திற்கெல்லாம் தன்னை மீறிய ஏதோ ஒரு சக்தியினால் கவரப்பட்டவன் போல் அவன் பூங்குளத்தை நோக்கி விரைந்து நடக்கலானான். அந்தச் சக்தி இத்தகையது என்பது, அன்று சாயங்காலம் மேற்படி பாழடைந்த கோவிலை நெருங்கியபோது அவனுக்கே தெரிந்து போயிற்று. ஆம்; அந்தச் சக்தி கல்யாணிதான்.

முத்தையன் கோவிலையடைந்தபோது அங்கே, தான் எத்தனையோ நாள் உட்கார்ந்து ஆனந்தமாய்ப் பாடிக் காலம் கழித்த அதே மேடையின்மீது கல்யாணி உட்கார்ந்திருப்பதைக் கண்டான். அவனுடைய நெஞ்சு திக் திக்கென்று அடித்துக்கொண்டது.

(தொடரும்)




The Far Eastern Economic Review என்ற பத்திரிகை What makes Asia laugh என்ற தலைப்பில் துணுக்குகளைத் தொகுத்தளித்திருந்தது. அதில் ஒன்று:

'ஒரு இந்தியன் தன் கிராமத்திலுள்ள குளத்தில் மிகப் பெரிய மீன் ஒன்றைப் பிடித்துத் தன் மனைவியிடம் கொடுத்து இரவு சாப்பாட்டுக்காக வறுத்துத் தரும்படி கேட்டான். 'ரேஷனில் நமக்குக் கொடுக்கும் சமையல் எண்ணெயை நிறுத்தி விட்டதால், இதை வறுப்பதற்கு எண்ணெய் இல்லை' என்று கூறி மனைவி மறுத்து விட்டாள். 'அப்படியானால் மண்ணெண்ணெய் ஸ்டவ்விலேயே வறுத்துவிடு' என்றான் கணவன். 'அரசாங்கம் மண்ணெண்ணெய் விலையை ஏற்றி விட்டதால் அதை வாங்குவதற்கும் என்னால் முடியவில்லை.' என்றாளாம் மனைவி. 'சரி. அடுப்புக் கரி நெருப்பிலாவது கட்டுக்கொடுக்கலாமல்லவா?'' என்று கணவன் கேட்க, 'மன்னிக்கவும். அதுகூடப் பற்றாக்குறை காரணமாக விற்பனைக்கு இல்லாததால் எனக்குக் கிடைக்கவில்லை' என்றாள் மனைவி.

யோசித்தான் கணவன். பேசாமல் அந்த மீனைத் தூக்கிக் குளத்திலேயே போட்டான். தப்பிப் பிழைத்த அந்த மீன் நீந்தியபடியே தண்ணீருக்கு வெளியே தலையைத் தூக்கிச் சொல்லியது:

''இந்திரா ஜிந்தாபாத்!''

இந்தக் கதையை எழுதியவர்:
குஷ்வந்த் சிங்
—சண்டே அப்ஸர்வர் இதழிலிருந்து
-அ. குமார்




செய்யாத குற்றத்துக்காகச் சிறைத் தண்டனையை அனுபவித்துக் கொண்டிருந்த அசோக் சோப்ராவுக்கு இன்று விடுதலை கிடைத்து விட்டது. மனைவியைக் கொலை செய்ததாகச் சந்தேகத்தின் பேரில் அவனைச் சிறையில் அடைத்த சட்டம் இன்று அந்தச் சந்தேகம் சந்தர்ப்பச் சூழ்நிலை காரணமாக ஏற்பட்டது என்பதாலும், போதிய சாட்சிகள் இல்லை என்பதாலும் அசோக் நிரபராதி என்று தீர்ப்பு வழங்கி விட்டது. அபாண்டமாகச் சுமத்தப்பட்டிருந்த பழியாலும், சமூகத்தின் ஏச்சுப் பேச்சுக்களாலும் நொந்து போயிருந்த அவன் ஜெயிலை விட்டு வெளியே வந்தவுடன் மனம் இலேசாகிப் புதிய தெம்புடன் காலாற வீட்டை நோக்கி நடக்க ஆரம்பித்தான்.

வீட்டை அடைந்தவுடன் மடக் மடக்-கென்று குளிர்ந்த நீரைப் பருகிவிட்டு, கட்டிலில் சாய்ந்த அசோக்கின் கண்கள் அந்த வீட்டைச் சுற்றி வட்டமடித்தன. வீட்டிலுள்ள ஒவ்வொரு சாமானும், இடமும் அவனுக்கு அருமை மனைவி நிர்மலை நினைவூட்டின. நிர்மல் அவனுடன் ஜோடியாக மாலையும் கழுத்துமாக நிற்கும் புகைப்படம், அலமாரியில் புது மெருகு மங்காத அவளுடைய விதவிதமான உடைகள், அலங்கார மேஜை மீது அவள் ஆசையுடன் உபயோகித்த அழகுச் சாதனங்கள்.

உயிரினும் மேலாக நேசித்த நிர்மலை அவன் கொலை செய்வதாவது? எப்படி ஊரும் உலகமும் சேர்ந்து அவனைக் கொலைகாரனாக்கி விட்டார்கள்! நிர்மலின் அந்தப் பயங்கர முடிவும், அதை யடுத்து அவனைச் சிறையிலடைக்கும் வரை சங்கிலித் தொடராக ந ‸ந்த எல்லாச் சம்பவங்களும் பயங்கரக் கனவைப் போன்று அசோக்கின் மனத்திரையில் தோன்றி அவனுடைய தூக்கத்தை விரட்டியடித்தன.

மோகம் முப்பது நாள், ஆசை அறுபது நாள் என்பது அசோக் சோப்ராவைப் பொறுத்தவரை சரியில்லை. நாளாக ஆக அசோக்கிற்கு அவன் மனைவி நிர்மலின் மேல் இருந்த ஆசையும் மோகமும் அதிகரித்த வண்ணமே இருந்தன. திருமணமாகி ஆறு மாதங்கள் ஆன பிறகும் கூட, அலுவலகத்தில் எப்பொழுது மணி ஐந்து அடிக்கப் போகிறது, வீட்டுக்குப் போய் மனைவியுடன் கொஞ்சி மகிழப் போகிறோம் என்று நண்பர்கள் கேலி செய்யும் அளவுக்குக் கடிகாரத்தையே ஆவலுடன் பார்த்துக் கொண்டிருப்பான். அசோக் அன்று வழக்கத்தை விட அதிக உற்சாகத்துடனும் பரபரப்புடனும் காணப்பட்டான். காரணம் வேறு ஒன்றுமில்லை. அவனுடைய பெற்றோர்களும், சகோதரியும் ஜெய்ப்பூருக்கு உல்லாசப் பயணம் போயிருந்ததால் நிர்மல் வீட்டில் தனியாக இருந்தாள்.

வீட்டின் அந்தத் தனிமையை முழுமையாக அனுபவிக்க விரும்பிய அசோக் ஒரு நிமிடத்தைக்கூட வீணடிக்கவில்லை. 'சரியாக மணி ஐந்து அடித்தவுடன் ஸ்கூட்டரை உதைத்துக் கிளப்பி, தில்லியின் போக்குவரத்து நெரிசலிலும் அரை மணியில் ஜனக்புரியை அடைந்து வாசல் மணி அடித்ததும் கதவைத் திறந்த நிர்மலை சினிமாவில் ஸ்லோ மோஷனில் காட்டுவது போல் அப்படியே அலாக்காகத் தூக்கித் தன் அதரங்களை அவள் இதழ்களில் பதித்துக் கொஞ்சி மகிழ்ந்தான். நேரம் போனதே தெரியாமல் ஆசை தீரக் கொட்டம் அடித்து விட்டுக் கண்ணயரும் பொழுது மணி பன்னிரண்டு அடித்து விட்டது. காலையில் நிர்மல் கண் விழிக்கும் போது சூரியோதயம் ஆகியிருக்

கவே, தன் மாமியார் மாமனார் ஊரிலிருந்து திரும்பி வருவதற்குள் ஏதாவது தயார் செய்ய வேண்டுமே என்ற கவலையில் அரக்கப் பரக்கச் சமையலறைக்குள் நுழைந்து காஸ் அடுப்பை மூட்டினால், காஸ் திடீரென்று தீர்ந்து போய் விட்டது. அவசரம் அவசரமாக மண்ணெண்ணெய் கானைத் திறந்து பரபரப்பில் கீழேயும் மேலேயும் சிந்திக் கொண்டு ஒரு வழியாக எண்ணெயை ஸ்டவ் அடுப்பில் விட்டுத் தீ மூட்டி அடுப்பில் காற்றடிக்கவும் 'பக்' கென்று தீ நாலா பக்கமும் பற்றிக்கொண்டது. தரையில் புரண்டு கொண்டிருந்த அவளுடைய துப்பட்டியைத் தொட்ட தீ மடமடவென்று பரவி உடல் முழுதும் எரிய ஆரம்பிக்கவே செய்வதறியாது தீனக் குரலில் கத்திக் கொண்டே வீடு முழுவதும் சுற்றிச் சுற்றி வந்தாள். இரவு வெகு நேரம் விழித்திருந்ததால் மாடியில் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்த அசோக்சோப்ராவுக்கு நிர்மலின் கூக்குரல் காதில் விழவில்லை.

சிறிது நேரத்தில் ஊரிலிருந்து திரும்பிய நிர்மலின் மாமனார், மாமியார், நாத்தனார் மூவருமாக மணி யடித்தும், குரல் கொடுத்தும் பதில் வராமல் போகவே கதவை இடி இடி என்று இடிக்க ஆரம்பித்தார்கள். சப்தம் கேட்டு அசோக் கண் விழித்து மாடியிலிருந்து இறங்கி வந்தான். ஏதோ கருகும் வாசனை வரவே சமையலறையை எட்டிப் பார்த்தான். ஐயோ! என்ன கோரமான காட்சி! உடலும் உடைகளும் கருகித் தீ ஜ்வாலையின் நடுவில் உருத் தெரியாமல் நிர்மல். அந்த அதிர்ச்சியிலும் அப்படியே மலைத்துப் போய் நின்றுவிடாமல் அசோக்கும் அவன் பெற்றோருமாக வேகமாகத் தண்ணீரைக் கொட்டித் தீயை அணைத்து உயிர் ஊசலாடிக் கொண்டிருந்த நிர்மலைக் கம்பளியில் சுற்றி எடுத்துக் கொண்டு ஆஸ்பத்திரியை நோக்கி ஓடினார்கள்.

ஆஸ்பத்திரியில் எமர்ஜன்ஸி வார்டில் இருந்த டாக்டர்களோ தீப்பட்ட காயத்துடன் ஒரு பெண்மணியை எடுத்துக்கொண்டு வந்த இவர்களை மேலும் கீழும் ஒரு முறை பார்த்துவிட்டு அங்கு டியூட்டியில் இருந்த





இரண்டு போலீஸ்காரர்களை அழைத்து வந்து விட்டார்கள். நிர்மலின் உயிரைக் காப்பாற்றுவதைத் தவிர வேறு ஒரு நினைப்பும் இல்லாமல் இருந்த அசோக்கிற்கு போலீஸ்காரர்களைக் கண்டவுடன் சுரீர் என்று ஏதோ ஒன்று உறைத்தது. மடியில் கனமிருந்தால் தானே வழியில் பயம் என்று தன்னைத் திடப்படுத்திக் கொண்டு போலீஸின் கேள்விகளுக்குப் பதிலளித்தான். நிர்மல் நினைவிழந்த நிலையில் இருந்ததால் போலீஸால் அவளிடமிருந்து ஒரு விஷயமும் கேட்டுக் கொள்ள முடியவில்லை.

நிர்மலைக் காப்பாற்ற அசோக் எவ்வளவோ வேகமாகச் செயல்பட்டும், விதியை யாரால் மாற்ற முடிந்தது! அநேகமாக உடல் முழுதுமே தீப்புண் இருந்ததால், ஆஸ்பத்திரியில் சேர்த்த சில மணி நேரத்திலே நிர்மலின் உயிர் பிரிந்தது. உடலை போஸ்ட் மார்ட்டம் செய்து மூட்டையாகக் கட்டி அசோக்கின் கையில் கொடுத்து விட்டார்கள். முதல் நாள் ஆசையும் அன்பாகக் கொஞ்சி மகிழ்ந்த நிர்மலை இன்று கரி மூட்டை போல் சுமந்து கொண்டு போய், நண்பர்களும் உறவினர்களும் புடைசூழ, மறுபடியும் அதே தீக்கு இரையாக்கிவிட்டு வீடு வந்து சேர்ந்தான் அசோக் சோப்ரா. அன்ன ஆகாரமின்றி, உறக்கமின்றி இரவு முழுவதும் பைத்தியம் பிடித்தாற்போன்று அரற்றிக் கொண்டிருந்த அசோக் தன்னையறியாமல் எப்பொழுது கண்ணயர்ந்தானோ அவனுக்கே தெரியாது. ஏதோ கோஷங்களின் சப்தம் கேட்டுத் திடுக்கிட்டு விழித்துக்கொண்டான்.

சடசடவென்று கற்கள் வந்து அவன் வீட்டு ஜன்னல்களைத் தாக்கின. எட்டிப் பார்த்தால், வாசலில் அந்த வட்டாரச் சமூக சேவகி உஷா கபூரின் தலைமையில் கொடிகளை ஏந்திய வண்ணம் அந்தக் காலனியைச் சேர்ந்த பெண்மணிகளின் கூட்டம்.

''வரதட்சிணைக் கொடுமை ஒழிக!''

''அசோக் சோப்ரா கொலைகாரன்!''

''பெண்ணைக் கொளுத்தாதே!''

என்று முழங்கியபடி அவர்கள் எறிந்த கற்களில் ஒன்று பறந்து வந்து அசோக்கின் நெற்றியைத் தாக்கி ரத்தம் பீறிட்டது.

இப்பொழுதெல்லாம் தில்லியில் பிரபலமடைய விரும்பும் சமூகசேவகிகளுக்கு இதைப் போன்ற ''வரதட்சிணைக் கொலைகள்'' ஒரு வரப்பிரசாதம். எப்படியாவது புகழ் சுட்டிச் சமூகத்தில் தனக்கென்று ஓர் இடத்தை அடைய விரும்பிய உஷா கபூர் கிடைக்கும் எந்த ஒரு சந்தர்ப்பத்தையும் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளத் தவறியதில்லை.

அசோக் சோப்ராவின் வீட்டின் முன் சிறிது நேரம் கோஷமிட்ட பின் உஷா கபூரும் மற்ற பெண்மணிகளும் ஊர்வலமாக ஜனக்புரியின் காவல் நிலையத்தை அடைந்து, போலீஸ் தக்க நடவடிக்கை எடுக்கவில்லை என்று கற்களை எறிந்தும் கோஷமிட்டும் தங்கள் கண்டனத்தைத் தெரிவித்தார்கள். தலைமை போலீஸகத்துக்கு ஒரு மனுவும் கொடுத்து விட்டுத் தாய்க் குலத்துக்குத் தாங்கள் அரும் பெரும் தொண்டாற்றி விட்டதாகப் பெருமைப் பட்டுக் கொண்டார்கள்.

கேஸை மூடிவிட்ட போலீசார் இந்தச் சமூக சேவகிகளின் மனுவின் விளைவுகளுக்குப் பயந்து மறுபடியும் தங்கள் ''தீவிர விசாரணை''களை ஆரம்பித்தார்கள். போலீஸ்காரர்கள் முதலில் அசோக் சோப்ராவின் பக்கத்து வீட்டில் குடியிருக்கும் திருமதி அரோராவை விசாரித்தார்கள். ''உங்களுக்கு அசோக் சோப்ராவின் குடும்பத்தினரை எவ்வளவு காலமாகத் தெரியும்?''

''மூன்று வருடமாக, எங்கள் பக்கத்து வீட்டில்தான் குடியிருக்கிறார்கள்.''

''இறந்துபோன நிர்மலைத் தெரியுமா?''

''ஓ! ரொம்ப நன்றாகத் தெரியும்'' பதில் சொன்னது திருமதி அரோராவின் இருபத்திரண்டு வயது மகள். மாமூல் கேள்விகளுக்குப் பிறகு விஷயத்துக்கு வந்தார் போலீஸ் இன்ஸ்பெக்டர்.

''நிர்மலுக்கு அவள் கணவன், மாமியார், மாமனாருடன் உறவு எப்படி இருந்தது? ஏதாவது சண்டை, தகராறு...''

''அதை ஏன் கேட்கிறேள்? தினமும் பொழுது விடிந்தால் சண்டைதான். ஹோலிப் பண்டிகைக்குப் புடவை எடுக்கவில்லை, தீபாவளிக்குச் சீர் செய்யவில்லை என்று மாமியார்க்காரி கத்திக் கொண்டே இருப்பாள். அசோக்கும் லேசுப்பட்டவன் இல்லை. நிர்மலே என்னிடம் சொல்லியிருக்கிறாள், எப்பொழுதுமே அவளுடைய சொத்தின் மேல் ஒரு கண் என்று.''

''அப்ப நிர்மலை அசோக் கொலை செய்திருப்பான் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?''

என்று அவர்களைத் தூண்டிவிடும் விதத்தில் இன்ஸ்பெக்டர் கேள்வி கேட்கவும், சற்றுப் பயந்துபோன திருமதி அரோரா சமாளித்துக்கொண்டு,

''அது எனக்குத் தெரியாது. ஒருவேளை இவர்களின் கொடுமை தாங்காது நிர்மல் தன் வாழ்க்கையை முடித்துக் கொண்டிருக்கலாம்'' என்று இழுத்தாற்போல் பதில் சொல்லவும், வெறும் வாயை மெல்பவர்களுக்கு ஒரு பிடி அவல் கிடைத்தாற்போல் ஆகிவிட்டது.

## சே! சுத்தமோசம்!

''இந்தக்காலத்துக் குழந்தைகள் ஆடம்பரத்தையும் சுகபோகத்தையும் விரும்புகின்றன. சகிக்க முடியாத நடத்தை. ரொம்பப் பிடிவாதம். பெரியவர்களுக்கு மதிப்புக் கொடுப்பதில்லை. அப்பா, அம்மாவோ, ஆசிரியர்களோ உள்ளே வந்தால் மரியாதையாக எழுந்துநிற்பது கூடக் கிடையாது. இவர்களெல்லாம் பெரியவர்களாக வளர்ந்தால் என்னதான் ஆவார்களோ!'' — இப்படிச் சொன்னவர் சுமார் இரண்டாயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த சாக்ரடீஸ்.

—எடையூர் சிவமதி



# தொண்டை கெட்டுவிட்டதா?

## ஆறு வழிகளில் உடனடியாக நிவாரணம் பெற




## ஒரு வொகாஸில்




# வொ கா ஸி ல்

வொகாஸில் சாப்பிடுங்கள், கரகரப்பு- இருமலிலிருந்து விடுதலை பெறுங்கள் .

தயாரிப்பவர்கள்: பார்லே ப்ராடக்ட்ஸ் பிரைவேட் லிமிடெடின் பார்மஸிடிகல் டிவிஷன்.

PARLE

ULKA-VOC-12 TAM

இதைக் கேட்ட அசோக் சோப்ராவுக்குத் தலையைச் சுற்றியது. தான் கேட்பது கனவா? நனவா? என்ன அபாண்டப் பொய்! திருமதி அரோரா தன் பெண்ணை எப்படியாவது அசோக்கிற்குக் கல்யாணம் பண்ணிவைக்க வேண்டும் என்று முயற்சி செய்தாள். தினமும் ஓர் ஆண் சிநேகிதருடன் திரியும் அந்த அதிநாகரிகப் பெண்ணை அசோக் நிராகரித்தது என்னவோ உண்மைதான். அதற்காக விளைவுகளைப் பற்றிச் சிந்தித்துக் கூடப் பார்க்காமல் இப்படித் தன்மீது கதை கட்டி வஞ்சம் தீர்த்துக் கொள்வார்கள் என்று அவன் கனவிலும் நினைத்ததில்லை.

இதுவரை சும்மா இருந்த நிர்மலின் பெற்றோர்களும் கேள்வி மேல் கேள்வி கேட்டுக் குழப்பியடிக்கவும், நிர்மலின் திருமணத்தின் பொழுது ஏற்பட்ட சில்லறைப் பூசல்கள் திடீரென்று விசுவரூபம் எடுத்து அவர்கள் மனங்களிலும் சந்தேகப் பேயைக் கிளப்பி விட்டன. சமூக சேவகிகளின் தூண்டுதலால் உந்தப்பட்ட அவர்களும் கடைசியில் ''எங்களுக்குக் கூட மாப்பிள்ளையின் மீது சந்தேகம்தான். திருமணமான பிறகு ஒரு முறை கூட நிர்மலைப் பிறந்த வீட்டிற்கு அனுப்பவே யில்லை. நாங்கள் எவ்வளவோ கூப்பிட்டும்'' என்று தங்கள் சந்தேகத்தை வெளியிட்டார்கள்.

நிர்மலைப் பிரிந்து ஒரு நிமிடம் கூட இருக்க முடியாத காரணத்தால் அவளைப் பிறந்த வீட்டுக்குத் தான் அனுப்பவில்லை என்பதை அவன் அவர்களுக்கு எப்படிப் புரிய வைப்பான்? நிர்மலுக்கும் அவனுக்கும் மட்டும் தெரிந்த உண்மையை இவன் எடுத்துரைத்தாலும் யார் இவனை நம்புவார்கள்?

ஒரு செய்தித் தாள் விடாமல் அவன் பெயர் அடிபட அவமானத்தால் கூனிக் குறுகிப்போய், கன்னங்களில் கண்ணீர் கோடு போடக் குனிந்த தலை நிமிராமல் அல்லசலில் எல்லோரும் வேடிக்கை பார்க்க போலீஸ் வேனில் ஒரு கைதியாக ஏறிப்போன காட்சியை இன்றைக்கு நினைத்தாலும் அசோக் சோப்ராவுக்கு வியர்த்துக் கொட்டுகிறது.

அப்பப்பா! ஒருவழியாக விடுதலை கிடைத்தது! தன் மனச்சாட்சிக்கு உண்மை என்ன என்பது தெரிந்திருந்தாலும் உலகத்துக்கு நிரூபிக்க வேண்டியது எவ்வளவு அவசியம்! சமூகத்தின் முன் கூனிக் குறுகாமல் பழைய நினைவுகளைத் துடைத்துவிட்டுத் தலை நிமிர்ந்து நடக்கலாம் என்பது அவனுக்கு நிம்மதியைக் கொடுத்தது.

அசோக்கின் வாழ்க்கையின் புதிய அத்தியாயத்தை அறிவிப்பது போல் அலாரம் கடிகாரத்தில் காலை மணி ஆறு அடித்தது. அவசரம் அவசரமாகப் பால் தூக்கை எடுத்துக்கொண்டு டிப்போவுக்குப் போனால் வழக்கம்போல் அந்தக் காலனியில் உள்ளவர்கள் எல்லாம் கியூவில் நின்று கொண்டிருந்தார்கள். இவனைக் கண்டவுடன் கூட்டத்தில் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. அதைக் கண்டும் காணாதவன் போல் க்யூவின் வாலில் சேர்ந்து கொண்டான். எல்லோரும் இவனையே திரும்பிப் பார்ப்பதும், கிசுகிசுவென்று பேசுவதும் இவனுக்கு வேதனையை அளித்தது. பெண்கள் கூட்டத்தில் ''இவன்தான்டி அந்தக் கொலைகாரப் பாவி'' என்று அறிமுகம்.

''அதற்குள் ஜெயிலிலிருந்து தப்பித்துக் கொண்டு வந்து விட்டானே!'' என்று அதிசயித்தாள் இன்னொரு பெண்மணி.

சுடுசொற்களைத் தாங்கிக் கொள்ள முடியாமல் பால் வாங்கக் கூடப் பிடிக்காமல் அவன் தள்ளாடியபடியே வீட்டை நோக்கி நடந்தான்.

ஆபீஸுக்குப் போனால் அங்கும் அவனைப் பார்த்தவுடன் எல்லா முகங்களும் வெறுப்பை உமிழ்ந்தன. தன் நெருங்கிய நண்பன் குப்தாவாவது தன்னைப் புரிந்து கொள்வான் என்று நினைத்து அவன் அறைக்குப் போனால் அவனும் ''எப்படிடா நீ இந்தக் காரியத்தைச் செய்தாய்? உனக்குக் கூடவா இப்படியொரு பணத்தாசை? நிர்மலிடம் உயிரையே வைத்திருந்தாய் என்று நினைத்தேனே. எல்லாம் வெறும் வேஷமா? உன்னை என் நண்பன் என்று சொல்லிக் கொள்ளவே எனக்கு அவமானமாக இருக்கிறது'' என்று வார்த்தைகளைக் கொட்டவும் அசோக் சோப்ராவுக்கு இருந்த கொஞ்ச நஞ்ச நம்பிக்கையும் தவிடு பொடியாயிற்று.

சட்டம் தன்னை விடுவித்து விட்டாலும் சமூகத்தின் கண்களுக்குத் தான் இன்னும் ஒரு குற்றவாளி. அதுவும் மனைவியைக் கொன்ற கொலைகாரப் பாவிதான் என்று நினைக்கையில் அசோக்கிற்கு இந்தச் சமூகத்தின்மேல், இந்த ஊரின் மேல், மனிதர்களின் மேல் அளவிட முடியாத வெறுப்பு ஏற்பட்டது. எங்கு சென்றாலும் ஒருபுறம் நிர்மலின் நினைவு. மறுபுறம் உற்றார், உறவினர், நண்பர்களின் துடுக்குப் பேச்சுக்கள், சுட்டெரிக்கும் பார்வைகள் எல்லாமாகச் சேர்ந்து அவனை ஓட ஓட விரட்டின. மனம் வெறுத்துப்போன அசோக் சோப்ரா கண்காணாத ஊருக்கு மாற்றல் வாங்கிக் கொண்டு தில்லியை விட்டு ரயிலேறினான்.

''உண்டியல் குலுக்கிட்டுப் போறவருக்கு முன்னாடியும் பின்னாடியும் ஏன் ஒரு ஆளைப் போகச் சொல்லி இருக்காரு தலைவரு?''

''உண்டியலோட தொண்டர்எதிர்க் கட்சியிலே போய்ச் சேர்ந்திடாம இருக்கத்தான்.'' —ச. கமலதியாகராஜன்



ஒவ்வொரு துளியிலும் தேர்ந்தெடுத்த தேங்காய்களின் நறுமணம்!

**Yendelux**
**coconut oil**



**என்டிலக்ஸ்**
தேங்காய் எண்ணெ

15 கிலோ 4 லிட்டர் டின்களிலும் 1 லிட்டர் 500,
200ml. பாலிதின் பாட்டில்களிலும் கிடைக்கிறது.

மு. மு. நாகலிங்க நாடார் சன்ஸ்
கொல்லம்—கேரளா
போன் : ஆபீஸ் : 2244, 4484, மில்ஸ் : 2266, 4611.

DISTRIBUTORS FOR TAMIL NADU
M. M. NAGALINGA NADAR. VIRUDHUNAGAR, Phone : 3107, 3745.

# 'வீடியோ' வரை காத்திரு! 3

கதை: ஜே.எஸ்.ராகவன். சித்திரம்: செல்லம்
















அப்பா! இவர்க்குடையை உடைச்சுப் பாருங்க உள்ளே வைரம் இருந்தாலும் இருக்கும்... ஆனா, அம்மா பேரு தங்கம் ஆச்சுதே, என்னிக்காவும் கட்டித்தங்கம்னு தைரியமா கொஞ்சியிருக்கீங்களா?
டாய்! டாய்!


ஆமாம் இந்தப் புள்ளைக்கு சீக்கிரம் கல்யாணம் செஞ்சு வச்சிடணும்.
நல்ல வேளை! ஞாபகம் வந்தது. சுரேஷோட ஜாதகத்தைக் கொண்டா... ஜோசியர் கேட்டார்.


அதைப் போட்டியிலேயோ வைப் லேயோஷ்வச்சான் தேடணும்...
நான் தேடறேன்னா நீ தேடறேன். எல்லா பெட்டியையும் வரிசையா பெருசு மேலே வை.... ஒரு சாக்பீஸ் கொண்டா.


போப்பா! எனக்குக் கல்யாணமே வேண்டாம்.
சுரேஷ்! நீ இந்த தேசப் பொண்ணைப் பாரு. வெளி நாட்டிலிருந்து அழைச்சிண்டு வந்தா, உங்கப்பா அவளுக்கு வீட்டில எக்கச்சக்கமா 'நீட்டி' போட்டுடுவார்!


அதுவும் பொண்ணு 'கலரா' இருந்துட்டா தொலைஞ்சது!
சுரேஷ்! தங்கமா வாங்கணும்னு ரிஜர்வ் டெபாசிட் போட்டுறியாமே... எதுக்குடா?


எனக்கு ரொம்ப நாளா ஏதுக்கதில ஆசை தெரியுமா? வீடியோப்பா 'வீடியோ'
என்னது? என்ன சொன்னே வீடியோவா!.... வீடியோ!.... வீடியோ!....
திடீர்னு அப்பாக்கு என்ன ஆச்சு?
தொடரும்

# (காஸெட்) ஒலிச் சித்திரம்

















''மகாராஜபுரம்சந்தானம், லால்குடி, வலையப்பட்டி, நாமகிரிப் பேட்டை, சேஷகோபாலன், ரமணி, சிட்டிபாபு.. இவங்க டேப் எல்லாம் எங்கிட்ட இருக்கு!''

''.....அதாவது இவங்க கிட்ட ஒலி வாங்கின டேப் எல்லாம் இவர்கிட்ட இருக்குன்னு அர்த்தம்!''




''வெண்கலக் கடையிலே யானை புகுந்த சப்தம் ரிக்கார்ட் பண்ணனும்! யானை ரெடியா இருக்கு! நீங்க சரின்னு சொல்ல வேண்டியதுதான் பாக்கி!''



''நகையோடசேர்ந்து அணியும் மினி மினி காஸெட்! ஆபத்துச் சமயத்திலே இப்படி அலறும்!''

''லவ் லெட்டர் கொடுக்கல்லேன்னு கோவிச்சுக்காதே கவிதா! இதோ லவ் காஸெட்! நம்ம காதலுக்கு உங்கப்பா தடையா இருந்தா அந்தத் தடியனுக்கு ஒரு பாடம் கற்பிப்போம்! டோண்ட் வொர்ரி!... டியர் ஹனி!... கவிதா டியர்''





''நான் கேட்டு அலுத்துப்போன காஸெட்டுகள் இருக்கு. வேணும்னுச் சொல்லுங்க.. 60% தள்ளுபடி''

## அத்தியாயம் 3

நடேச முதலி நடை பாதையின் நடுவே வலது கன்னத்தைத் தரையில் வைத்தபடி சுருண்டு படுத்திருந்தார். காலிலிருந்து தலை வரை மக்கிய கித்தானை இழுத்துப் போர்த்தி யிருந்தார். மெர்க்குரி வெளிச்சமும் விடி காலைப் பனியும் பின்னிப் பிணைந்து கனமாய்ச் சாலையில் இறங்கிப் புரண்டன. நடேச முதலியின் புத்தி முதலில் விழித்து விட்டது. உடம்பு மட்டும் அசந்து கிடந்தது. மண்டைக் குள் ஸ்விட்ச் போட்டது போல் இந்த விடி யல் நேரம் சரியாய் விழிப்பு வந்துவிடுகிறது. புத்தி விழித்துக் கொண்ட சில நிமிடங்களுக் கெல்லாம் நடேச முதலி எழுந்து விடுவார். அசதி எத்தனை இருந்தாலும் தன்னிச்சை யாய் எழுந்து உட்கார்ந்து விடுவார். சோம் பல் முறித்து அடங்கின பிறகு எழுந்து நின்று விடுவார்.

விழித்திருப்பதை விட உறங்குவதை விட இப்படி இரண்டுங் கெட்டானாய்க் கிடக்கிற சில நிமிடங்கள்தான் உலகத்தில் பெரிய சுகம். புத்தியும் உடம்பும் பொருத்திக் கொள்கிற நேரம்தான் பெரிய இதம். அப் படி புத்தி விழிப்புத் தட்டிய தும் நடேச முதலி கண் களைத் திறக்கமாட்டார்.

''காதார் குழையாடப்
பைம்பூண் கலனாடக்
கோதை குழலாட
வண்டின் குழாமாடச்
சீதப் புனலாடிச் சிற்றம்பலம் பாடி
வேதப் பொருள்பாடி
அப்பொருளா மாபாடி''

மனசு பாட ஆரம்பிக்கும். திருவாதிரை யன்று தில்லைஸ்தான சுவாமி புறப்பாடும் திவட்டியும் குளிரும் விபூதி பூசும்போது வரும் நெற்றி சூழும் கருஞ்சாந்தும் நினைவுக்குவரும். நடேச முதலியார் தாத்தாவும் அப்பாவும் சிதம்பரம் கோயிலில் பல்லக்குத் தூக்கிகள். பெரிய சன்னதி மான்யக்காரர்கள். ஒன் னரை ஜான் தண்டு போட்டு நாலு வீதியும் சுற்றி வலம் வரவேண்டும். வெறுமே புடி புடி என்கிற ஓட்டம் இல்லை. முன்னும் பின்னும் நடை போட்டு ஒயிலாய் வர வேண்டும். ஒரு கையை முன் ஆளுடன் பின்னி மறு கையைத் தண்டில் சுற்றிக் கொண்டு நிலம் பார்த்துக் கணக்கோடு கால் வைக்க வேண் டும். தண்டு தூக்கியபடி முகம் சற்று நிமிர்ந்தி விழி உயர்த்திச் சுற்றியுள்ள ஜனம்




பாலகுமாரன்

பார்க்கிறபோது ஜனத் திரளின் பரவசம் பார்க்கிறபோது சுவாமி பார்த்த மாதிரி இருக்கும். இந்தப் பாட்டும் நடையுமே இன்னும் விழித்தவுடன் புத்தியில் ஓடும் விஷயமாய் இருக்கிறது.

பாட்டு முடிந்த பிறகு நடேச முதலி கண்களைத் திறக்க மாட்டார். உடம்பை விறைத்து நீட்டி இடுப்பைத் தொட்டு வேட்டி முடிச்சப் பார்த்துக் கொள்வார். வேட்டி இறுக்கம் தெரிந்த பிறகு மறுபடி கருண்டு கொள்வார். தண்ணித் தொட்டித் தெரு அமைப்பும் முகங்களும் மனசில் எழும். மனசு அவசரப்படுத்தும். எழுந்து நிற்கக் கட்டளை போடும்.

இன்றும் புத்தி கட்டளை போட்டது. போதும் ஐயா, எழுந்திருங்க நடேச முதலி எழுந்திருங்க என்று பேசிற்று. நடேச முதலி தன்னை வாடா போடா என்று அழைத்துக் கொள்வதில்லை. ஐயா என்ன தூக்கம் எந்திரிங்க எந்திரிங்க என்று மரியாதையாய் அழைத்துக் கொள்வார். இது சின்ன வயசில் ராவுத்தர் சொல்லிக் கொடுத்த விஷயம். ''தன் தலையைத் தானே அடிக்கக்கிறது, நாறப்பொழப்புன்னு சொல்லிக்கிறது, தன்னை மட்டமாக்கிப் பேசறது தப்பு. நாம வந்தோம் நாம சொன்னோம்னு எங்க ஜாதில பேசறது தமிழ் தெரியாத பேசறதில்ல. நானும் எனக்குள்ள இருக்கிற இறை உணர்வும்னு அர்த்தம். நம்ம மனசு புத்தி கடவுள் இருக்கிறஇடம். மனுசர்கள் மட்டமே இல்லே; நம்மை நாம மதிச்சா பிறத்தியாரை அவ ஆறு பண்ணத் தோணாது. கெட்ட வாசகம் வாயிலேர்ந்து வராது.''



ராவுத்தர் இது மாதிரி நடேச முதலிக்கு நிறையச் சொல்லிக் கொடுத்திருக்கிறார். இருபது வயசில் சிதம்பரம் பல்லக்கை விட்டுத் தண்ணீத் தொட்டித் தெருவில் மூட்டை தூக்க வந்தபோது அந்த இளைஞனை அழைத்து உயர்வான விஷயங்களைப் போதித்திருக்கிறார். வயிற்றுக்குச் சோறும் உடுக்கத் துணியும் படுக்க இடமும் தேவையறிந்து உதவியும் செய்திருக்கிறார்.

''சோதித் திரும்பாடிச்
சூழ்கொன்றைத் தார்பாடி
ஆதித் திறம்பாடி
அந்தமா மாபாடிப்
பேதித்து நம்மை
வளர்த்தெடுத்தப் பெய்வளைதன்
பாதத் திறம்பாடி
ஆடேலோ ரெம்பாவாய்.''

''அடடா... முதலியாரே, உங்களுதுகூட ஒரு வழிபாடே இல்லிங்க. ஆதித் திறம்பாடி அந்தமா மாபாடின்னு சின்ன விஷயமா? எவ்வளவு பெரியவிஷயம்! இதைப் பல்லக்குல தூக்கிட்டுப் போக முடியுமா? பேதித்து நம்மை வளர்த்தெடுத்த... யா அல்லா... பாடுங்க முதலியாரே பாடுங்க.'' கடை சாத்துகிற நேரம், இடங்கு பூட்டின பிறகு முதலியும் ராவுத்தரும் பேசிப் பேசி மாய்வார்கள். இனம் புரியாத ஸ்நேகத்தில் திளைப்பார்கள்.

ராவுத்தர் சொத்து நடேச முதலி சொத்து. நடேச முதலி ராவுத்தர் சொத்து.

போர்வையோடு விடிகாலைக் குளிரை உதறி முதலி எழுந்து நின்றார். தெரு முனையில் வெளிச்சம் படர்ந்தது. வெளிச்சம் குலுங்கிச் சுவர் ஏறி நிழல்கள் நகரப் படர்ந்து படர்ந்து பளீரென்று தெரு முழுவதையும் தாக்கிற்று.

''அடேடே தொன்னூத்தெட்டு அம்பத்தியாறு. ராவுத்தர் வண்டி. கரீம்பாய் ஓட்ற லாரி. நெல்லூர் சரக்கு. அட்ரு சக்கை. இன்னிக்கு எழுந்தவுடனே அரிசி வண்டியா. என்ன இவ்வளவு கருக்கத் தெருவுல நுழையுது. எப்பவும் பிரிட்ஜ் மேலப் போட்டுட்டு வெளிச்சம் பாத்துட்டுத்தானே வருவான் என்ன ஆச்சு கரீம் பாய்க்கு.''

ரும் ரும் ரும் என்று என்ஜின் தன் வலிவு அடக்கிக் கொண்டு வருகிற சிரமம் காட்டிற்று. லகான் இழுப்பில் திமிருகிற குதிரை மாதிரி இப்படி ஊர்ந்து வருவது தனக்கு இஷ்டமே இல்லை என்கிற மாதிரி ஒலி காட்டிற்று.

ஒலியும் ஒளியும் முதலியை நெருங்கிக் கடந்து பின் பக்க சிவப்பு வெளிச்சம் தரையைத் தேய்த்தபடி நடந்தது. முன் பக்கக் காபின் கதவு பாதி திறந்தபடி க்ளீனர் செல்லத்தம்பி வழி சொல்லிக் கொண்டிருந்தான். பத்து கஜம் லாரி கடந்ததும் தம் தம் என்று சைட் கதவில் அடித்தான். வண்டி நின்று குலுங்கியது. பட்டென்று என்ஜின் சப்தம் அணைந்தது. ஒளிக் கற்றைத் துவண்டு சுருண்டு உள்ளடங்குவதை இங்கிருந்தே முதலி பார்க்க முடிந்தது.

தண்ணித் தொட்டித் தெருவில் அன்றைய முதல் லாரி உள்ளே நுழைந்து பத்துப் பேருக்கு வேலை தர இருபது பேருக்குச் சோறு போடத் தயாராய்க் கர்ப்பிணிப் பெண்ணாய்க் காத்திருந்தது.

நடேச முதலி எழுந்து நின்று கித்தானை மடித்து வைத்தார். வேட்டியை நீக்கி உடம்பு முழுவதும் துடைத்துக் கொண்டார். சில்லென்று குளிர் தாக்கிற்று. தோள்வரை வேட்டியைப் போர்த்திக் கொண்டு நாயர் கடையை நோக்கி நடந்தார்.

மொசமொசென்று தெரு விளக்குகள் அணைந்தன. இருட்டு தண்ணித் தொட்டித் தெருவை மார்போடு அணைத்துக் கொண்டது.

''என்னாத்துக்குப்பா இத்தினி கருக்க அணைக்கிறீங்க. காலவரு போவக்கூடாதா.'' கரீம் பாய் வண்டியின் உள் விளக்கு மட்டுமே பேட்டரி துணையில் எரிந்து கொண்டிருந்தது.

''என்ன மேஸ்திரி டீ போடப் போறியா'' தலைப்பாகையும் மேல் வேட்டியுமாய்த் துணிப் பந்தாக நின்றிருக்கும் முதலியைச் செல்லத் தம்பி அடையாளம் கண்டு கொண்டான்.

''என்ன செல்லத்தம்பி... கருக்க வந்துட்ட... தாடிக்காரன் வண்டியோன்னு பாத்தேன். கரீம்பாய் எங்க... படுத்திட்டாரா?''

''கக்கூஸுக்குப் போயிருக்காரு.''

''மைதானம் பக்கம் எங்கேயாவது நிறுத்தி முடிச்சிட்டு வரவேண்டியதுதானே. இங்க வந்து இருட்டுல கால் வச்சு லோல்படுவானேன்.''

''வழில ஆள் அடிச்சுட்டாரு. அதான் நேர உள்ள வந்துட்டம்.''

''எங்கடா'' நடேச முதலி குரல் உயர்த்திப் பதறினார்.

''புத்தூர் தாண்டி.''

''ஆணா பெண்ணா?''

''தெரியலே. நிறுத்தாத வந்துட்டாரு.''

''மேலே ஏத்திட்டீங்களா?''

''வண்டி அடிச்சுத் தூக்கிப்போட்டிருச்சு.''

''பூட்டுருக்குமா?''

''தெரியலே. எழுபது எண்பதுல வந்துக்கிட்டிருந்தாரு. இருப்பத்துல வண்டி அலை பாஞ்சுது.''

''ஆரும் பாக்கலியா? ஊரா? மைதானமா?''

**கடந்த இரு வாரங்களில்:**

## இரும்பு குதிரைகள்



### ஒருபுறம்:

சென்னை சிந்தாதிரிப் பேட்டை பாகல் தோட்டத்தில் கூவம் கரையையொட்டி காயலான் கடைகள் ஏராளம். அங்கே நாயக்கர்கடைக்கு வந்து பென்ஸ் சக்கரம் ஒன்றை — விரிசல் கண்டிருப்பது தெரியாமல் வாங்கிப் போகிறான் மெக்கானிக் கண்ணப்பன். அது ராவுத்தர் லாரியில் பொருத்தப்பட்டு லோடு ஏற்றிச் செல்லவும் புழலேரி தாண்டியதும் அலைய ஆரம்பித்து பெரியபாளையம் அருகே சாலையை விட்டு விலகி ஒரு கிணற்றின் விளிம்பில் மோதிச் சுவர் உடைய நிற்கிறது. டிரைவர் வரதன் டிரைவிங் லைசென்ஸ் அடங்கிய பையுடன் கிளம்பி பஸ் ஏறி காணாமல்போகிறான்.

''தெரியலே. மைதானமாத்தான் இருந்திச்சு.. ஆடுங்களா நின்னுச்சு. மேய்க்கிற ஆளோ இல்லே தனியாப் போற ஆளோ. நொச்சுன்னு லெப்ட் சைட் பம்பர்லே தட்டித் தூக்கிப் போட்டுப் புல்லுலே உருளுறதைப் பாத்தேன். அவ்வளோதான்.''

''கரீம்பாய் பயந்துடுச்சா?''

''கக்கூஸ் போயிருக்கு. நான் சொன்னேன்னு கண்டுக்காதே.''

''ராவுத்தர் கிட்டச் சொல்லிட்டீங்களா''

''விடிஞ்சதும் சொல்லணும்.''

''வண்டிலே காயமா?''

''தெரியலே. விடிஞ்சதும் பாக்கணும். நானும் வரட்டா டீ வாங்கித் தரியா?''

நாயர் கடையில் பால் வட்டிலுக்குக் கீழே கெரஸின் ஸ்டவ் கோபமாய்ச் சீறிக்கொண்டிருந்தது. சூடான டீ கிளாஸை முகத்தில் செல்லத்தம்பி அழுத்திக் கொண்டான். விளக்கு வெளிச்சத்தில் தலை கலைந்து சோர்

## மறுபுறம்:



ஆபீஸ் வேலையும் நேரத்துக்குக் கட்டுப்பட்ட வாழ்க்கையும் பேண்டும், பூட்ஸும் கத்தை கத்தையாய் ஃபைல்களும் அலுத்துப் போக, விசுவநாதன் தான் திரைப்பட டைரக்டராகி விட்டதுபோல் கற்பனைகளில் இறங்குகிறான். அவன் தூக்கம் பிடிக்காமல் தவிப்பது கண்டு மனைவி தாரிணி ஆபீஸ் வேலை என்றெண்ணி அனுதாபத்துடன் அணைக்கிறாள். மறுநாள் காலை ஃபோன் ஒலித்து ஆபீஸுக்கு வரவேண்டிய லாரி ஒன்று புத்தூர் அருகே மாட்டிக் கொண்டு விட்டதாகச் செய்தி கிடைக்கிறது- விசுவநாதனுக்கு அவசர அழைப்பு.

## இந்த வாரம்:

*நிலைக்களன் மீண்டும் மாறுகிறது!*

வும் தூக்கமுமாய்ச் செல்லத்தம்பி காணப்பட்டான்.

''நீயும் பயந்திட்டப் போல. ராவுத்தர் இருக்கச் சொல்ல என்ன பயம். வண்டிய நிக்கவுட மாட்டாரு. ஆளை அனுப்பிச் சமாதானமாயிடும். ஒரு நா வண்டி நின்னாக் கூடத் தாங்க மாட்டாரு.'' முதலி வெறும் தண்ணீர் டம்ளரில் வாங்கி வாய் கொப்பளித்தார்.

''அதுக்கில்லே.''

''அடிச்சுட்டுச் சும்மா வந்துட்டமேன்னு பாக்கிறியா? வண்டின்னு ரோட்லே ஓட்டினம்னா இப்படித்தான் ஏதாவது வந்து படும். தானா வந்து விழும்.''

''கரீம்பாய்க்குப் போன மாசம் இரண்டாவதாக ஒரு பொண்ணைக் கட்டினாரு.''

''அதுக்கென்ன லாரிக்காரனுக்கு நிறுத்தின இடமெல்லாம் கல்யாணம்தான்.''

''அதுக்கில்ல. அப்படி அவரு மாட்டினா நான்தான் உள்ளாரப் போம்படி இருக்கும்.''

''ஏன் தொரை?''

''அப்படிச் சொல்லித்தான் வண்டி ஓட்டச் சொல்லிக் குடுத்தாரு.''

''இப்ப ஆளை அடிச்சதும் கரீம் இதைச் சொல்லிடுச்சா?''

''சொல்லலே. சொன்னாலும் சரின்னு ஒத்துக்க வேண்டியதுதான்.''

முதலி மௌனமாய் இருந்தார். அநேகமாய் இது அங்கே மரபு. கிட்டத்தட்ட குரு காணிக்கை. துடைக்கச் சொல்லி, கழுவச் சொல்லி டயர் மாத்தச் சொல்லி, ஸ்டியரிங் பிடிக்கக் கற்றுக் கொடுத்து என்ஜின் வேலைகள் விவரித்து எதுவுமே தெரியாத க்ளீனர்ப் பையனை டிரைவராய் வண்டிக்கு முழுப் பொறுப்பாய், வேலை தெரிந்த ஆளாய் ஆண்பிள்ளையாய் மாற்றுகிற செயலுக்குக் காணிக்கை இது.

செல்லத்தம்பியால் மறுக்க முடியாது. மறுத்தால் மரியாதை இருக்காது. நாளைக்கு டிரைவராய் வண்டி எடுக்கிறபோது இந்தக் கதையை ஒரு க்ளீனர் பையனிடம் சொல்லி அதட்ட முடியாது. அவனிடமும் இதை எதிர்பார்க்க முடியாது.

'டிரைவரை மாட்டவுட்டுட்டு க்ளீனர் பையன் ஓடிட்டாம்பா' என்பது கேவலம். நன்றி கொன்ற செயல். குருத் துரோகம். தண்ணித் தொட்டித் தெரு கூடி நின்று செல்லத்தம்பி மீது எச்சில் துப்பும். ஆனால் செல்லத்தம்பிக்கு வயதான அம்மா இருந்தாள்.

செல்லத்தம்பி டீ டம்ளரை வைத்துவிட்டு மெல்ல வண்டி நோக்கிப் போனான். சட்டென்று திரும்பி முதலியை அணுகி, ''கௌசல்யா இருக்கிறதா?'' என்று கேட்டான்.

முதலி அவனை நிமிர்ந்து பார்த்தார். பையன் பயந்துதான் போயிருக்கிறான். இன்றோ நாளையோ கைதாகி விடுவான்.

''நம்ப மணியோட பார்த்தேன். பம்பாய்க்காரன் ஷெட்லே இருக்கும். மணி சாயந்திரம் குடிச்சுட்டு வந்தான். போய்ப் பாரு.''

''மணி எதுனா சொல்வானா?''

''அவன் சொல்றது என்ன? எருக்கத் தோட்டத்துக்குத் தோட்டக்காரன் வேறயா? குரல் கொடுத்துப் பாரு.''

செல்லத்தம்பி சற்று நின்று யோசித்தான். பிறகு மடமடவென்று பம்பாய் கோடவுன் நோக்கிப் போனான். இரண்டு கிடங்குகளுக்கு நடுவே சாக்கடை வாருவதற்கான சந்து இருந்தது. உள்ளே வெகு தூரம் நடந்து திரும்பியதும் கட்டடம் முடிந்து பனிச் சென்று வெட்ட வெளி தெரிந்தது. இரும்புப் பலகைகளும் நீண்ட உருளைகளும் கிடந்தன. ஆளுயர மரப் பெட்டிகள் அடுக்கி வைக்கப் பட்டிருந்தன.

சுவர் ஓரமாய் அடுக்கி வைக்கப்பட்டிருந்த பெட்டிகளுக்கு நடுவே நான்கு அடி இடைவெளியில் மேலே கித்தான் மூடி முன் பக்கம் புடவை போட்டு மறைத்திருந்தது. கிடங்கு பின்புறம் ஒற்றை பல்பு வெளிச்சம் காட்டிற்று.

செல்லத்தம்பி புடவையை விலக்கி உள்ளே இருட்டை நோக்கி 'கௌசல்யா' என்று கூப்பிட்டான்.

உள்ளே ஆள் அசையும் சப்தம் கேட்டது. ''யார் அது?'' கரகரப்பாய் ஒரு பெண் குரல் கேட்டது.

(தொடரும்)



# இதயத்தின் வேஷம்

## ஜெகசிற்பியன்

### 1

அன்று மதியத்திலிருந்தே வானம் திறந்து காட்டுவதும் மூடிக் கொள்வதுமாக இருந்தது. வெயிலின் இளமுறுவலைத் திறந்து காட்டும்போதெல்லாம் மழைத் தூறல்கள் ஜரிகை இழைகளாகப் பாவு கட்டித் தறி போடுவதும், பின்னர் மந்தார மூகத் திரையை இழுத்து மூடிக்கொள்ளும்போதெல்லாம் பம்பரக் காற்று வீசிக் குப்பைக் கூளங்களுக்குப் பரமபதம் அளிப்பதுமாக வித்-தாரம் பண்ணிக் கொண்டிருந்தது.

எங்கோ, நண்டுக்கும் நரிக்கும் கோலாகலமாய்க் கல்யாணம். அதைப் பறைசாற்றுவது போல் இருண்டு கிடந்த தென்கிழக்குத் திசையில் அவ்வப்போது கெட்டி மேளம் கொட்டி முழக்கும் ஓசைகள்!...

அது ஒரு செப்டம்பர் மாதத்து முதல் தேதி. திங்கட் கிழமை.

மத்திய அரசின் நிதி இலாகாவைச் சார்ந்த தென் பிராந்தியக் காரியாலயம் ஒன்றில் வேலை பார்க்கும் சுமார் நூற்றைம்பது ஆண், பெண் ஊழியர்களிடையே நவரச உணர்ச்சிகளைக் கிளறி விடும் நாள் அது.

அதாவது, சம்பள தினம்!

உயர்நிலை, இடைநிலை, கடைநிலை ஆகிய உத்தியோகப் பிரிவுகளையும் வாலிப, நடுத்தர முதுமை முதலான வயசுப் பிரிவுகளையும் பிரம்மசரியம், கிருக ஸ்தா சிரமம், சந்நியாசம், ஆகிய வாழ்க்கைப் பிரிவுகளையும் உள்ளடக்கி அமைந்த ஊழியர் குழாம், மாலை ஐந்து மணிவாக்கில் காரியாலயத்தை விட்டுத் தனித் தனியாகவும், ஜோடி ஜோடியாகவும், கும்பல் கும்பலாகவும் வெளியே வந்த போது அவர்கள[illegible] களில் அந்த நவரச உணர்ச்சி பாவங்களுள் ஒவ்வொன்றும் அவரவர்க்கு உரிய உத்தியோக, வயசு, வாழ்க்கைப் பிரிவுகளுக்கு அப்பாற்பட்ட வகையிலே குடியேறித் தீவிர கதியில் தொழிற்படலாயிற்று.

அந்தக் காரியாலயத்தின் கதவுகள், சன்னல்கள் எல்லாம் சாத்த ஆரம்பித்த நேரத்தில் – நான்கு பேர் கொண்ட ஒரு சிறு குழு சாவதானமாக வெளியே வந்தது.

நாற்பத்தைந்துக்கும் ஐம்பதுக்கும் இடைப்பட்ட வயசுகளில் மூவர்: ஒருவன் மட்டும் சற்று இளமை சுமந்த வாலிபத் தோற்றம். முப்பத்தாறு வயசு மதிக்கலாம். ஆனால் நடை உடை பாவனைகளில் அம்மூவரின் வார்ப்பாகவே அவனும் விளங்கினான்.

அவர்களுக்கும் அன்று சம்பளத்தினம் தான். வாங்கிய பணமும் அவரவர் ஜேபியில் அப்படியே இருந்தது. ஆயினும் அந்தத் தினத்தினால் – அந்தச் சம்பளப் பணத்தினால் – அவர்கள் எவ்விதப் பரபரப்புக்கோ விறுவிறுப்புக்கோ ஆட்பட்டதாகத் தெரியவில்லை. முற்றும் துறந்த முனிவர்கள் போல், எதற்கும் சலனமடையாத ஞானிகள் போல், அமைதியாகவும் நிதானமாகவும் நடந்துவந்தார்கள்.

# கதாசிரியர் இல்லத்தில் அவர்மகள் அண்மையில் கண்டெடுத்த புதையல்!

ஓடி ஓடிக் களைத்துப் போன பந்தயக் குதிரைகளின் தொய்ந்த நடை; பாடிப் பாடிச் சலித்துப் போன மாங்குயில்களின் நிலக் குரல்; ஆடி ஆடிச் சோர்ந்து போன மயில்களின் தோகை அடங்கிய தோற்றம்; மிரண்டு, மிரண்டு நிலைத்துப்போன மான்களின் பரிதாபப் பார்வை; குரைத்துக் குரைத்துத் துவண்டு போன ஞமலிகளின் ஒடுக்கம் — என்று இவ்வாறு நவரசங்களில் இறுதி ரஸமான சாந்தத்தின் பிண்ட பிரமாணங்களாக வந்த அந்நான்கு பேரும் சாலையோரமிருந்த ஒரு 'பங்க்' கடையண்டை சென்று நின்றனர்.

கடந்த முப்பத்தொரு நாட்களில் அவர்கள் கடன் பற்றாக வாங்கிய வெற்றிலை பாக்கு, புகையிலை, சோடா, பழம், பொடி, சிகரெட் முதலானவற்றின் மொத்தத் தொகை கணக்கை முன்னதாகவே தனித் தனியாகக் கூட்டிப் போட்டுத் தயாராக வைத்திருந்த அட்டைகளை எடுத்துப் பவ்யமாக நீட்டினான் பெட்டிக்கடைக் காரன்.

ஒவ்வொருவரும் தமது கணக்கைத் தாமே ஒரு முறைக்கு இரு முறையாகக் கூட்டிச் சரிபார்த்துவிட்டுப் பணத்தைக் கடைக்காரனிடம் கொடுத்துப் பேரேட்டில் வரவு எழுதினர். அன்று வாங்கிய சம்பளத்தில் முதல் பட்டுவாடா முடிந்தது. உடனே நடப்பு காலத்தின் புதிய கடன் பற்று பிள்ளையார் சுழியுடன் ஆரம்பமாயிற்று. நடுத்தரவயசு வாலிபன் மட்டும் ஒரு சிகரெட் பாக்கெட்டும் தீப்பெட்டியும் வாங்கிக்கொள்ள, மற்ற மூவரும் வெற்றிலை சீவல்



பொடி புகையிலை பொட்டலத்தோடு கணக்கு எழுதிவிட்டுப் பஸ் நிலையத்தை நோக்கி நடந்தனர். அவர்களிடையே பேச்சு இல்லை, சிரிப்பு இல்லை: அமைதி, நிதானம்.

''ஏன் சார், உங்களுக்கும் பட்டாபியோட விலாசம் தெரியுமா?'' என்று கேட்டான்.

''அவ்வளவு நிச்சயமாத் தெரியலே! எப்பவோ ஒரு சமயம் நம்ம மாம்பலம் சுவாமியோட அவனோட வீட்டுக்குப் போன ஞாபகம்....''

''வடக்குத் தியாகராய நகரிலே கங்கா நகர்னு ஒரு புதுக் காலனியாம்.''

''ஓ!...ஆமா. அவனோட வீட்டு நம்பர் மட்டும் ஞாபகம் இருக்குது. பதினேஞ்சா?... பதினேஞ்சுதான். ஆனா தெருப் பேர்? குருநாதன் தெருவோ, குருசாமி தெருவோ—இந்த ரெண்டில் ஏதோ ஒண்ணு!''

வாலிபன் இதைக் கேட்டு முகம் மலர்ந்தான்.

இருபத்தைந்தாம் நம்பர் பஸ் வந்து நின்றது. ராகவன் என்ற அந்த நடுத்தர வயசு வாலிபன் பஸ்ஸில் ஏறினான்.

## 2

**ரா**கவனும் பட்டாபிராமனும் ஒரே அலுவலகத்தில் உத்தியோகம் பார்க்கிறவர்கள்தாம் என்றாலும், குணம், நடத்தை, போக்கு, பொருளாதார நிலை ஆகிய எல்லா வகையிலும் இரு துருவங்கள் போன்றவர்கள்.

பட்டாபிவசதியான குடும்பத்தில் பிறந்தது மட்டுமல்ல, வசதியாக வாழ்ந்து கொண்டிருப்பவனும் கூட. 'உத்தியோகம் புருஷ லட்சணம்' என்பதற்காகவே உத்தியோகம் பார்ப்பவன். அவனுடைய தந்தை வருமான வரி அதிகாரியாக இருந்து ஓய்வு பெற்றவர். பெண் கொடுத்த மாமனாரோ சுதந்திரத்துக்குப் பின் அரசியலில் புகுந்து பிரபலம் ஆன பெரிய புள்ளி. செல்வத்துக்கும் செல்வாக்குக்கும் கேட்க வேண்டுமா? அவன் விரும்பினால் இப்போது பார்க்கும் உத்தியோகத்திலிருந்து படிப்படியாக அல்ல—ஒரே தாண்டாகத் தாண்டி உச்சியில் போய் உட்கார்ந்துவிட முடியும். அதற்கான தகுதிகள் உண்டா என்று அவன் கவலைப்பட வேண்டிய இல்லை. அவனுக்கு உள்ள பிற தகுதிகள், அல்லது பக்க பலங்கள் அதை யெல்லாம சமாளித்துக் கொண்டு விடும்.

ஆனாலும் அவன் அவ்வாறு மேலே போக விரும்பவில்லை.

"தேவையானப்ப சாவதானமா அதை விலைக்கு வாங்கிட்டாப் போச்சு." இதெல்லாத்தையும் விட இன்னொரு முக்கியமான காரணமும் இருக்குது. 'ஆட' வேண்டிய காலத்திலே ஆடி, அநுபவிக்க வேண்டிய பருவத்திலே அனுபவிச்சுடணும். அதுதான் வாழ்க்கைக்கு அழகு. வாழக் கொடுத்து வைச்சவங்களுக்கு அழகு."

கஷ்டம், நெருக்கடி என்று யார் வந்து கடன் கேட்டாலும் மறுக்காமல், பிரதிப்பிரயோசனம் எதிர்பார்க்காமல் உதவி செய்யும் குணம்தான் அது. 'பத்து, இருபது முதல், நூறு, இருநூறு வரையில் அவன் எந்தச் சமயத்திலும் கைமாற்றாகத் தந்து உதவத் தயாராக இருப்பான். ஆனால் யாராயிருந்தாலும் சொன்ன தேதியில் வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும். தவறினால் நாலு பேர் மத்தியில் தலைகுனியும்படியான வார்த்தைகளை வீசிக் கேட்டுவிடுவான்;

அன்று ராகவனும் அப்படித்தான் பட்டாபியின் அந்த விநோதப் பொழுது போக்குக்கு இலக்கான நிலையில் அவனைப்பார்க்கப்போய்க் கொண்டிருந்தான். — கடன் கேட்க அல்ல; வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுப்பதற்காக.

இரண்டு மாதங்களுக்கு முன் கண் ஆபரேஷனுக்காக வந்திருந்த தன் தமக்கையை—எல்லாம் நல்லபடியாக முடிந்த பின் ஊருக்கு அனுப்பி வைக்க ஒரு நூற்றைம்பது ரூபாய் தேவைப்பட்டு, எங்கெங்கோ முட்டி மோதிப் பார்த்தான். எவ்விடத்திலும் வழி பிறக்கவில்லை. சம்பளம் வரும்வரையில் பொறுத்திருக்கலாம் என்றால் தமக்கையின் கணவர் அவளை உடனே புறப்பட்டு வரும்படி அவசரமாகக் கடிதம் எழுதிவிட்டார். அவருக்கு உடல் நலம் சரியில்லையாம். என்ன செய்வது? தன் அத்யந்த சகாவான மாம்பலம் சுவாமியிடம் இந்த இக்கட்டான நிலைமையைச் சொல்லி ஒரு குறை பொருமித் தீர்த்தான். அவர் அவற்றை யெல்லாம் கேட்டு ஆர அமர யோசித்துக் கடைசியில் சொன்னார்: ''நம்ம பட்டாபியிடம் கேட்டுப் பார்த்தீங்களா? கேட்டால் கிடைக்கலாம்''

அந்தக் காரியாலயத்தில் வேலை பார்ப்பவர்களில் பெரும்பாலோர் தமக்குப் பண முடை ஏற்படும்போதெல்லாம் பட்டாபியிடம் கைமாற்றாக வாங்கிக் கொள்ளும் விஷயம் ராகவன் அறிந்ததே. ஆனால் அவன் மட்டும் இப்போதைய நெருக்கடிபோல் இதற்கு முன் பலமுறை ஏற்பட்டிருந்தும்—அப்படி ஓர் உதவிக்கு அவனை நாடியதில்லை. இதற்குத் தனியான காரணம் எதுவுமில்லை.

**இ**ரண்டு மூன்று தலைமுறைகளாகவே மேடு பள்ளங்கள் அதிகம் காணாமல் ஒரே சீரான வாழ்க்கை அமைப்புடன் இயங்கி வந்த நடுத்தரக் குடும்பம் ஒன்றில் பிறந்து வளர்ந்தவன் ராகவன். அதனால் நடுத்தர

அவன்: இந்த ரோட்டுக்கு வாழ்க்கை ரோடுன்னு பேரு!

இவன்: ஏன்டா?

அவன்: நிறைய மேடு பள்ளம் இருக்கும்.

—ஆர். ஜெய்சங்கர்



# ஒரே டீலக்ஸ் டிவி TS62

சீரான உன்னத ஹை-ஃபை
ஒலிக்கு 10 வாட் ஒலிபெருக்கி
யும், 20 செ.மீ. டியூயல் கோன்
ஸ்பீக்கரும் கொண்ட ஒரே
டீலக்ஸ் டிவி சாலிடெர் TS62.
இத்துடன் உங்கள் ரெக்கார்டு
பிளேயர், டேப் ரெக்கார்டர்,
எப்எம் ஏஎம் (FM AM) டியூனர்
முதலியவற்றை இணைத்து,
டிவியில் நிகழ்ச்சி இல்லாத
நேரங்களிலும் சாலிடெர் டிவியை
உபயோகிக்கலாம்.

செய்தி வாசிப்பவரின் கண்
இமைகள் கூட தெளிவாகத்
தெரியும் படத்தோற்றம். இதில்
சாலிடெருக்கு நிகர் சாலிடெர்
ஒன்றே.

இது மட்டுமின்றி, துரிதமான,
சிறந்த சர்வீஸ் அளிப்பதில்
பிரசித்திப் பெற்றது சாலிடெர்



HE 189 A

# சாலிடெர்

வர்க்கத்தினருக்கே உரிய எதிலும் ஒட்டாத் தன்மை, எதற்கும் கலங்கிவிடுகிற கோழைத் தனம், எதையும் தயங்கித் தயங்கி அணுகுகிற சுபாவம், சபலத்துக்கு முன் சிந்தனைச் சுருக்கமும், விளைவுக்குப் பின் சிந்தனைப் பெருக்கமும் கொண்டு வீணாக மறுகிக் குமைகிற பூனை ஞானம் முதலான குணங்கள் அளவுக்குச் சற்று அதிகமாகவே அவனிடம் குடிகொண்டிருந்தன. ஆகவே அவனோடு பணி புரிவோர்க்கிடையில் அவன் ஒரு தனி ரகமாகவும், அவர்களால் அவனுடைய வயசுக்கு மீறி மதிக்கப் பெறுகிறவனாகவும் இருந்தான்.

அந்தக் காரியாலயத்தில் அவனைப் போன்ற குணப் போக்குள்ள மூன்று பேர் இருந்தனர். அவர்களோடுதான் அவன் நெருங்கிப் பழகுவான்; பேசுவான். ஆனால் அவர்கள் அவனை விடப் பத்துப் பன்னிரண்டு வயசு மூத்தவர்கள். அன்று மாலை பஸ் நிலையம் வரையில் அவனுடன் வந்தவர்களே அவர்கள். அவர்களே ஒருவரை யொருவர் 'மாம்பலம் சுவாமி, நந்தனம் சுவாமி, ஆலந்தூர் சுவாமி சேத்துப்பட்டு சுவாமி' என்றுதான் விளித்துக்கொள்வார்கள்.

நல்ல சிவந்த மேனி; திண்மையான உடற்கட்டு; அதற்கேற்ற உயரம்; கருள் கருளான கேசம், கவர்ச்சிகரமான கண்கள்; நடை உடை, பாவனைகள் எல்லாம் பௌருஷ லட்சணங்கள் வாய்ந்தவை. இவ்வாறு விளங்கிய ராகவனின் பரந்த நெற்றிக்குக் கீழே, இடக் கண் புருவப் பொட்டிலிருந்து தொடங்கிக் காதுவரையில் கன்னங் கரேலென நீளமாகத் தழும்பு ஒன்று ஓடியிருந்தது. பிறவியிலேயே அமைந்துவிட்ட அந்தக் கருந் தழும்பு கன்னச் சருமத்தை விட ஒரு நூலிழை அளவுக்குத் தடிமனாகவும் இருந்தது. அதன் மேல் ஆங்காங்கே சில ரோமங்கள் குத்திட்டு வளர்ந்திருந்தன.

அது சிறு குறைதான். அதனால் அவனது ஆண்மை நிறைந்த கம்பீரத் தோற்றம் எந்த வகையிலும் பாதிக்கப்படவில்லைதான். ஆயின், எழில் மிக்கத் தங்கத் தட்டின் மீது சிறிதளவு தார் ஊற்றினாற் போல் தோற்றம் தந்த அந்தத் தழும்பே அவனுள் ஒருவிதத் தாழ்வு மனப்பான்மையை அளித்து அவனைப் பெண்களிடம் அஞ்சி ஒதுங்கி நடக்கச் செய்திருந்தது.

இப்படிக் கூனிக் குறுகிய குண—மன இயல்புகள் கொண்ட அவன், உற்சாகமே வடிவாய், உல்லாசமே வாழ்க்கையாய் இருந்த பட்டாபியிடம் நெருங்கிப் பழகுவானா? பழகினாலும் கடன், கைமாற்று என்று கேட்கத் துணிவானா? எனவேதான் அவனுடைய பணத் தேவைக்கு மாம்பலம் சுவாமி பட்டாபியிடம் அணுகச் சொன்ன யோசனையைக் கேட்டுக் குழம்பித் தவிக்கலானான்.

வேறு வழி ஏதும் தோன்றவில்லை. இறுதியில் எப்படியோ துணிவு பிறந்தது. 'சரி; கேட்டுத்தான் விடுவோமே!' என்ற முடிவுடன் போய்க் கேட்டே விட்டான்.

''அடடே, உங்களுக்கு இல்லாத பணமா சுவாமி! எவ்வளவு வேணும்? நூத்தைம்பதா! இப்பவே வாங்கிக்கிங்க. ஆனா ஒரு விஷயம் மாசம் பிறந்து சம்பளம் வாங்கின அன்னிக்கே திருப்பிக் கொடுத்துடணும். அதிலே இழுபறி ஏதுவும் கூடாது, என்ன?''

''ரொம்ப தாங்ஸ், பட்டாபி! ஆனா... இந்த மாசம் ஐம்பது, அடுத்த மாசம் நூறுன்னு கொடுத்துடறேன். மொத்தமாக் கொடுக்கிறதுன்னா...''

''சிரமமா இருக்கும் என்கிறீர்களா? வாஸ்தவம்தான். உங்க சௌகரியப்படி ரெண்டு மாசத் தவணையிலே திருப்பிடுங்க.''

ராகவனின் பணத் தேவை சரிப்பட்டு விட்டது. நல்லபடியாகத் தன் தமக்கையை ஊருக்கு அனுப்பி வைத்து நிம்மதி யடைந்தான்.

சென்ற மாதம் சம்பளம் வாங்கிய உடனே பட்டாபிக்கு முதல் தவணையாகத் தர வேண்டிய ஐம்பது ரூபாயுடன் அவனை ஆபீசில் தேடிப் பார்த்தான். பட்டாபி அன்று அரை நாள் லீவ் எடுத்துக் கொண்டுபோய்விட்டான் என்ற தகவல் அப்போதுதான் தெரிய வந்தது. அவனுடைய வீட்டு விலாசமும் இவனுக்குத் தெரியாது. யாரிடமாவது கேட்கலாமென்றாலோ, கேட்பவரிடம் 'ஏன், எதற்கு?' என்ற விவரமெல்லாம் சொல்லியாக வேண்டும். தான் கைமாற்றுப் பணம் வாங்கின விஷயத்தை ஆபீஸில் பரவவிட அவன் விரும்பவில்லை. மறுநாள் பட்டாபியை ஆபீஸிலேயே பார்த்துக் கொடுத்து விடலாம் என்ற தீர்மானத்துடன் வீட்டுக்குப் போய் விட்டான்.

இங்கேதான் — இதனால்தான் — ஒரு சிக்கல் ஏற்பட்டது; இரகசியம் ஒன்றும் வெளியாகியது.

ஆமாம். அன்று வீட்டுக்குப் போய்த் தன் மனைவி சீதாவிடம் சம்பளப் பணத்தைக் கொடுத்துவிட்டு ரேஷன் கடையில் நல்ல அரிசி வந்து விட்டதாவென்று பார்த்து வருவதற்காக வெளியே போன ராகவன், இரவு ஏழரை மணி வாக்கில் திரும்பி வந்தபோது சீதா சமையற்கட்டில் இருந்தபடி இரைந்து கத்திக் கொண்டிருக்க, பிள்ளைகளெல்லாம்—ஆறு வயசிலும், நான்கு வயசிலும் இரண்டு

இந்த ஆண்டு நடைபெற விருக்கும் ஐ.ஏ.எஸ். தேர்வுக்கான பாடத் திட்டத்தில் அமரர் கல்கி எழுதிய 'சிவகாமியின் சபதம்' நாவலும் சேர்க்கப் பட்டிருக்கிறது.

—தங்க மனோகரன்








பையன்கள்; மூன்று வயசில் ஒரு பெண், ஒன்றரை வயசுக் கைக்குழந்தை ஒன்று—மூலைக்கு ஒன்றாய் அழுது கொண்டிருந்ததைக் கண்டு வியப்பும் திகைப்புமாகக் கூடத்து அறையிலேயே நின்று விட்டான்.

அவனுக்கு இது புது அனுபவம். தன் மனைவி சீதா கடந்த ஏழு வருடக் குடும்ப வாழ்க்கையில் இப்படிக் குரல் இறந்து கோபமாகப் பேசியதையோ பிள்ளைகளை அடித்துஅழவிட்டதையோ ஒருநாளும் கேட்ட இல்லை; பார்த்ததும் இல்லை. அவளுக்குக் கோபமே வராதோ, அல்லது கோபப்படவே தெரியாதோ என்றுகூட தனக்குள் பலமுறை எண்ணி வியந்தும் மகிழ்ந்தும் இருக்கிறான். இப்படிப்பட்ட அவளா இன்று, கத்திக் கொண்டிருக்கிறாள்? எதற்காக; யார்மீது இவ்வளவு கோபம்?—

கணவன் வந்துவிட்டதை அறிந்த சீதா விர்ரென்று கூடத்துஅறையைநோக்கி விரைந்தாள். அவள் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன. கண்களில் வெறுப்பும் அருவையும் பொங்கி வழிந்தன. ''உங்க அக்காவை ஊருக்கு அனுப்ப யார் கிட்டப் பணம் கடன் வாங்கினீங்க?'' என்று எடுத்த எடுப்பிலேயே சூடான குரலில் கேள்வியைத் தொடுத்தாள்.

அவளை ஏறிட்டுப் பார்த்துத் திருதிருவென விழித்த ராகவன் அசட்டுப் புன்முறுவலுடன் ''என்ன இது கேள்வி? விடிய விடியப் பாரதம் கேட்டுட்டுப் பாஞ்சாலி துரியோதனனுக்குத் தங்கச்சியான்னு கேக்கிற மாதிரி கேட்கிறே?'' என்றான். ''என்னோட ஆபீஸ் நண்பன் ஒருத்தன் கிட்ட வாங்கினேன்னு அன்னிக்கே உன்கிட்டச் சொல்லலையா?''

''சொன்னீங்க; ஆனா அந்த நண்பன் யாருன்னு அப்போ சொல்லல்லே!''

''சொன்னா உனக்குத் தெரியுமா? அது அவசியமில்லேன்னு நினைச்சேன்.''

''நீங்க சொல்லியிருக்கணும்.''

''சரி; இனிமே ஊர் பேர் விலாசத்தோடு சொல்றேன்; போதுமா?'' என்றான் ராகவன் குறும்பாகச் சிரித்தபடி.

சீதாவின் முகத்தில் இருந்த கடுமை சிறிதும் குறையவில்லை. ''நீங்க ஏன் அந்த ஆள் கிட்டே போய்க் கடன் வாங்கினீங்க? உங்களுக்கு வேற இடமே கிடைக்கலையா?'' என்று அதே சீறலுடன் வினவினாள் அவள்.

''வேற இடம் இல்லாமத்தான் அவன் கிட்ட வாங்கினேன்; அதனால் என்னவாம்?'' என்று சொல்லி மீண்டும் சிரித்தான் ராகவன்.

''அவமானம். காசு தேவைன்னா எவன் கிட்டேயும் போய்க் கை ஏந்திட வேண்டியது தானா? என் கிட்டே ஒரு வார்த்தை சொல்லியிருந்தா கழுத்துச் சரட்டையாச்சும் கழற்றிக் கொடுத்திருப்பேன் அடகு வச்சுக்க!''

ராகவனின் முகம் லேசாகச் சிவந்தது. 'நடந்துபோன காரியத்தை இன்றைக்குத் திடீரென நினைத்துக் கொண்டு இவள் ஏன் இப்படி அர்த்தமில்லாமல் கேள்வி கேட்டுக் கொண்டிருக்கிறாள்?... இல்லை; அர்த்தத்தோடுதான் கேட்கிறாளா? என் அக்காவுக்கு அவ்வளவு பணம் கடன் வாங்கிச் செலவழித்து விட்டேனே என்ற பொறாமையால் இவ்வாறு ஆத்திரமடைந்து பேசுகிறாளோ? அம்மாதிரி எண்ணமுடையவளாக இருந்தால் அதை அப்போதே வெளிக் காட்டியிருக்கலாமே? அந்தப் பணத்தைக் கொண்டு இவனே தன் கைப்படத் தடபுடலாகச் செலவு செய்து நாத்தியை ஊருக்கு ரயிலேற்றி அனுப்பி வைத்தானே!' — சட்டென்று தலை நிமிர்ந்த அவன், ''ஆமா, நான் யார் கிட்டக் கடன் வாங்கினேன் என்கிறது உனக்குத் தெரியுமா? நீ யாரை நினைச்சுக்கிட்டு இப்படியெல்லாம் சீறிப் பாயறே?'' என்றான் பாதிக் கோபமும், பாதிச் சிரிப்புமாக.

''வாங்கினதுதான் வாங்கினீங்க; அவனை ஏன் இங்கே வீடு வரை வரச் சொன்னீங்க? ஆபீஸிலேயே அவனுக்குக் கொடுக்க வேண்டிய பணத்தை விட்டெறிஞ்சுட்டு வந்திருக்கக் கூடாதா?''

ராகவனுக்கு இப்போதுதான் விஷயம் ஒருவாறு விளங்கியது.

அசட்டுச் சிரிப்புடன், ''நான் வெளியே போயிருந்தப்போ பட்டாபி இங்கே வந்திருந்தானா சீதா? அவன் இன்னிக்கு ஆபீசுக்கு வரலே. லீவு போட்டுட்டான். அவனோட வீட்டு விலாசமும்எனக்குத் தெரியாது. அதனால் நாளைக்கு அவனை ஆபீசில் பார்த்துப் பணத்தைக் கொடுத்துக்கலாம்னு வந்துட்டேன்'' என்றான் ராகவன்.

''வந்தான்! உடனே ஐம்பது ரூபா எடுத்துக் கொடுத்து அனுப்பிச்சுட்டேன்'' என்று சீதா ஆக்ரோஷம் நிறைந்த குரலில் சொன்னதைக் கேட்ட ராகவனுக்கு, 'இவள் பணத்தை அவன் கையில் கொடுத்திருப்பாளா அல்லது முகத்தில் வீசியெறிந்து விரட்டியடித்திருப்பாளா?' என்றே சந்தேகமாகிவிட்டது. மௌனமாக அவளைப் பார்த்துக் கொண்டிருந்தான் அவன்.

''இங்கே பாருங்க! அந்த மனுஷன் என் வீட்டு வாசல்ல இனிக் காலெடுத்து வைக்கக் கூடாது. கடன் கொடுத்தவன் வரத்தான் செய்வான்னா, அவனுக்கு இன்னும் பாக்கி நிக்கிற நூறு ரூபாயை இப்பவே எடுத்துக் கிட்டுப் போய்க்கொடுத்துட்டு வாங்க. அதுக்கு உங்களுக்குச் சக்தி இல்லேன்னா, நீங்க என்ன பண்ணுவீங்களோ எனக்குத் தெரியாது. நான் சொன்னது சொன்னதுதான்.''

விர்ரென்று உள்ளே போய்விட்டாள் சீதா. வெல வெலத்து உட்கார்ந்திருந்த ராகவனுக்கு எவ்வளவுதான் சிந்தித்துப் பார்த்தும் அவளது கோபத்துக்கும் வெறுப்புக்கும் காரணமே புரியவில்லை.

இரவு அவளது கோபத்துக்கான காரணத்தை வினவியபோது, நடந்த விஷயத்தை விளக்கினாள் சீதா.

அதைக் கேட்ட ராகவனுக்கு உள்ளூரக் கொஞ்சம் அதிர்ச்சியாகத்தான் இருந்தது.

பிறகு அதெல்லாம் ஒரு பெண்ணின் வாழ்க்கையில் நடக்கக் கூடிய விஷயமே என்றெண்ணி அமைதியடைந்தான். அத்துடன் தனதுவாழ்க்கையிலும் அதேபோன்றநிகழ்ச்சி நடந்திருப்பதை நினைத்துப் பார்த்தபோது அதில் தனக்கும் தன் மனைவிக்கும் இருந்த ஒற்றுமை அவனுக்கு ஆச்சரியத்தைத் தந்தது.

ஆம்; சீதாவை முதலில் பெண் பார்க்க வந்தவன் பட்டாபிராமன்தான். அவளது அழகில் மயங்கிய அவன் அவளை மணக்கத் தன் சம்மதத்தை உடனே தெரிவித்தும் விட்டான். பணக்காரரான அவனுடைய தந்தையும், எளிய குடும்பத்துப் பெண்ணாயிற்றே என்று பாராமல் தன் மகனின் விருப்பப்படி அவளை மருமகளாக்கிக் கொள்ள முடிவு செய்தார். கல்யாணக் காரியங்கள் ஜரூராக நடக்க ஆரம்பித்தன. சீதாவின் தந்தை ஒரு பள்ளிக்கூட தலைமை ஆசிரியர்தாம் என்றாலும், விடுதலை இயக்கங்களில் பங்கு பெற்றுப் பல தியாகங்கள் செய்த சிறந்த தேச பக்தர், இலட்சியவாதி, சிந்தனையாளர் என்று நாட்டு மக்களால் போற்றப் பெற்றவர் மதிக்கப்பெற்றவர். அவர் தம் வேலையை ராஜிநாமாச் செய்து விட்டு அப்போது நடந்த மாநில சட்ட மன்றத் தேர்தலில் வேட்பாளராக நின்றார். மகளின் திருமணக் காரியங்களில் முனைந்ததோடு தேர்தல் பிரசார வேலைகளிலும் தீவிரமாக ஈடுபட்டார்.

அவரை எதிர்த்து நின்றவர் பெரும் பணக்காரர். திடீர் அரசியல்வாதியாகித் தேர்தலில் குதித்தவர். ஆனால் சீதாவின் தந்தைக்கே மக்களின் ஆதரவு திரண்டது. அதைக் கண்டு பீதியடைந்த அந்தப் புது அரசியல் வாதி ஏதேதோ தில்லு முல்லுகளெல்லாம் செய்து அவரைத் தேர்தல் களத்திலிருந்தே விரட்டிவிட முயன்றார். அது முடியாது என்று தெரிந்ததும் தமது கடைசி அஸ்திரமாக ஒரு காரியத்தைச் செய்தார்.

பட்டாபியின் தந்தையை வலியப் போய்ப் பார்த்துத் தம் பெண்ணை நிறைய வரதட்சிணையோடு அவனுக்குக் கன்னிகா தானமாய்ச் செய்து தருவதாகச் சொன்னார். வெள்ளம் பள்ளத்தைநோக்கித்தானே ஓடும்.

''இந்தியா வேண்டி நிற்பது இளையராகிய ஆண்மக்களில் ஓராயிரம்பேரேனும் செய்யும் தியாகத்தையே. —சுவாமி விவேகாநந்தர்.
-தங்கமனோகரன்



சீதாவின் தந்தையிடம் பட்டாபியின் தந்தை நாலே வார்த்தைகளில், 'உங்கள் பெண்ணை என் மகனுக்குப் பிடித்திருக்கிறது; ஆனால் அவனுடைய அம்மாவுக்குத்தான் பிடிக்கவில்லை; நான் என்ன செய்யட்டும்? வருத்தப்படாதீர்கள்' என்று நாசூக்காகச் சொல்லிவிட்டு அதே முகூர்த்தத்தில் அந்தத் திடீர் அரசியல் வாதியின் பெண்ணைப் பட்டாபிக்கு 'ஜாம், ஜாம்' என்று செய்து முடித்து விட்டார்.

பட்டாபிக்கு அதில் பரம சந்தோஷம் தான். 'மரத்தில் மறைந்தது மாமத யானை' என்பது போல் அவன் சீதாவிடம் சண்ட பேரெழில் பணத்தில் மறைந்து போயிற்று.

இந்த எதிர்பாராத அதிர்ச்சியால் மனம் கலங்கிப்போன சீதாவின் தந்தை, கடைசி நேரத் தேர்தல் பிரசார வேலைகளில் சரியாகக் கவனம் செலுத்தாமல் விட்டு விட்டார். இதைத்தான் அந்தத் திடீர் அரசியல்வாதியும் எதிர்பார்த்திருந்தார்.

இவைதாம் சீதா சொன்ன விவரங்கள். ஒரு பெண்ணால் மறக்கக் கூடிய, அல்லது மன்னிக்கத் தக்க விஷயங்களா இவை? எனவேதான் அந்தப் பட்டாபியிடம் போய்த் தன் கணவன் கடன் வாங்கியதுமல்லாமல் அவனை வீடுவரை வரச் செய்தும் விட்டானே என்று அவள் ஆத்திரமடைந்து சீறினாள்!

அடுத்த மாத சம்பளத் தினத்தன்றும் பட்டாபி ஆபீசுக்கு வரவில்லை. அவனுக்குத் தரவேண்டிய பாக்கிப் பணத்தை வீட்டில் கொண்டு போய்க் கொடுக்கப் புறப்பட்டு விட்டிருந்தான். ராகவன்

## 3

கங்காநகரை ராகவன் அடைந்தபோது, ஆறு மணிக்கு மேல் ஆகி விட்டது. அன்றெல்லாம் வானம் மப்பும் மந்தாரமுமாக அவ்வப்போது தூறலும் போட்டுக்கொண்டிருந்ததால் சற்று விரைவாகவே இருள் சூழ்ந்து வரலாயிற்று. தெரு விளக்குகள் எரியத் தொடங்கின.

நாலைந்து தெருக்களே கொண்ட அந்தச் சிறிய காலனியில் இருந்த வீடுகளில் பெரும்பாலானவை நவீன பாணியில் மிக அழகாகக் கட்டப்பட்டிருந்தன. சில பழைய வீடுகளும் தென்பட்டன.

பிரதான சாலையில் மெல்ல நடந்தவாறு அதிலிருந்து மேற்கும் கிழக்குமாகப் பிரிந்த ஒவ்வொரு தெருவின் பெயரையும் பார்த்துக் கொண்டு சென்ற ராகவன் சட்டென்று நின்றான்.

குருநாதன் தெருஎன்றுபொறித்த பெயர்க் கம்பம் அவன் கண்ணில் பட்டது. 'பட்டாபியின் வீடு இந்தத் தெருவில்தான் இருக்குமோ? ஆலந்தூர் சுவாமி, குருநாதன் தெரு அல்லது குருசாமி தெரு — இவ்விரண்டில் ஏதோ ஒன்று என்றல்லவா கூறினார்?''

பதின்மூன்று, பதினான்கு, பதினைந்து...

ராகவனின் முகம் மலர்ந்தது. அந்த வீட்டை ஏறிட்டுப் பார்த்தான். புதிதாகக் கட்டிய மொட்டை மாடிவீடு அது. ரொம்பப்



## குறு நாவல்

4

பெரிசுமில்லே; சிறிசுமில்லே. ஆனால் மற்ற வீடுகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது அவ் வீடு மிகச் சாதாரணமாகவும் கவனிப்பா ரற்றுக் கிடப்பது போலவும் தோற்றமளித் தது.

பணச் செழிப்புடன் டாம்பீக வாழ்க்கை வாழும் பட்டாபியின் வீடா இது? அவ னுடைய வீட்டை எப்படியெல்லாமோ கற் பனை பண்ணிக் கொண்டு வந்திருந்த ராகவனுக்கு இதைக் கண்டதும் வியப்பு மட்டுமல்ல, ஏமாற்றமும் ஏற்பட்டது.

மெல்லக் கனைத்துவிட்டு இரும்புக் 'கேட்'டைத் திறந்து கொண்டு உள்ளே சென்றான்.

''இது பட்டாபிராமனுடைய வீடுதானே?'' என்று தயக்கப் புன்னகையுடன் விளித்தான் ராகவன்.

அவனை ஏற இறங்கப் பார்த்த அந்த அம் மாள், ''நீங்க யார்?'' என்று கேட்காமல், ''ஆமா, உள்ளே வாங்க!'' என்றாள் இள நகையுடன். ஏனோ அவளுடைய கண்களில் மகிழ்ச்சியொளி வீசியது.

அன்பும் பண்புமான இவ்வரவேற்பு ராகவனுக்கு மேலும் ஆச்சரியமூட்டியது.

''அவரைப் பார்க்க வேணுமா? வெளியே போயிருக்காரே! இப்ப வருகிற நேரந்தான். இங்க, பத்து நிமிஷங்களிலே வந்துடுவார். சங்கோசப்பட ஒண்ணுமில்லே. சும்மா வந்து உட்காருங்க.''

அவனை விட அதிக பவ்யத்தோடு சொன்ன அந்த அம்மாள் ஒருக்களித்திருந்த அறைக் கதவை நன்றாகத் திறந்து விட்டு உள்ளே திரும்பி, ''ஏ கமலா!'' என்று மெல்லக் குரல் கொடுத்தவாறு சென்றாள்.

''**கா**ப்பி சாப்பிடுங்க!''

இனிய குரலில் இவ்வாறு கூறிய அவள், குனிந்து, சோபாவின் கைப்பிடி மேல் தட்டை வைத்துவிட்டு நிமிர்ந்த அதே சமயம் ராக வனும் தன் பார்வையை உயர்த்தினான். மறு கணம் அவன் கண்ணில் மின்னற்கொடி சுருண்டாற் போல் அதிர்ச்சியுற்றுப் பின்னால் சாய்ந்தான். அதே வேகத்தில் மீண்டும் நெம்பி நிமிர்ந்து, கழுத்தை நீட்டி அவளைப் பரபரப்புடன் நோக்கினான். அவளும் அவ னைப் போன்றே அதிர்ச்சி யடைந்தவளாய், ஓரடி பின்னால் நகர்ந்து திருதிருவென விழித்த வாறு, ''ஓ!.... நீங்களா?....'' என்று முனகிக் கொண்டே அங்கிருந்து விர்ரென்று திரும்பி உள்ளே போய் விட்டாள்.

'அவளா இவள்? அந்தக்கமலாவா இவள்?'

தன்னை யறியாமலே தன் முகத்தின் கருந் தழும்பை இடக் கையால் மூடி மறைத்துக் கொண்டு தலை குனிந்தான் ராகவன். அங்கு உட்கார்ந்திருக்கவே அவனால் முடியவில்லை. எழுந்து ஓடிவிடலாமா என்று ஒரு கணம் பரபரத்தான். ஆனால் எழுந்திருக்கவும்இய லாத இரும்புக் கனத்துடன் உடல் மரத்து விட்டாற்போல் உணர்ந்தான். அவன் ஏறிய சயத் தகட்டில் அமர்ந்திருப்பது மாதிரி அந்தச் சோபாவில் கிடந்து அப்படியும் இப் படியுமாக நெளிந்தான்.

**யா**ர் இந்தக் கமலா?—

ஓர் ஆணின் இதயத்தால் தாங்கிக் கொள்ள முடியாத பேரவமானத்தை ராகவ னுக்கு அளித்து, அவனையும் அவனது குடும் பத்தாரையும் தலை குனியச் செய்த 'பெருமை' பெற்றவள் அவள்!

ஆம்; பத்து ஆண்டுகளுக்கு முன் நடந்த சம்பவம் அது. ராகவனும் கமலாவும் பக் கத்துப் பக்கத்து வீடுகளில் குடியிருந்தவர்கள். பல வருஷங்களாகவே அவ்விரு குடும்பங் களும் நெருங்கிய நட்புக் கொண்டு உறவாடி வந்தன. கமலாவின் குடும்பம் சற்று வசதி யானது. அவளுடைய தந்தைக்குக் கருங்கல் ஜல்லி மொத்த வியாபாரம்.

ராகவன் தன் கல்லூரிப் படிப்பை முடித் துக்கொண்டு சர்க்கார் உத்தியோகத்திலும் அமர்ந்தான். கமலா மெட்ரிகுலேஷன் இறுதித் தேர்வில் தவறியதனால் மேற் கொண்டு படிப்பைத் தொடராமல் வீட்டிலே தங்கிவிட்டாள். இவ்விருவரும் தங்கள் சிறு பிராயத்தில் ஒன்றாய்ப் பழகி, சண்டையும் சமாதானமுமாக விளையாடி மகிழ்ந்தவர்கள் தாம். பிறகு அவள் பெரிய மனுஷியானாள். அவனும் வாலிபனானான். அதனால் அவர்களது பால்ய நெருக்கம் இயல்பாகவே குறைந்து போயிற்று. சமயா சமயங்களில் தெரு வாசலிலோ திறந்த சன்னலிலோ, மொட்டை மாடியிலோ இருவரும் பார்க்க நேரும்போது இலேசாக ஒரு புன்முறுவல் பூத்துக் கொள்வதோடு சரி.

சிறு வயதில் அவளுடன் சேர்ந்து விளை யாடி மகிழ்ந்ததை யெல்லாம் கல்லூரிப் படிப்புப் படித்த காலத்தில் மறந்துவிட்டு வாலிபக் காளையாக அவன் ஆனபோது, அவளும் அவனைப் போல் பருவக் குமரியாய் வளர்ந்து நின்றதால் முன்னை மாதிரி கட்டுக் காவலின்றிப் பேசிப் பழக வாய்ப்பற்றுப் போன நிலையில், எப்போதாவது அபூர்வ மாகத் தெரு வாசலிலோ, திறந்த சன்ன லிலோ, மொட்டை மாடியிலோ அவனைப் பார்க்க நேர்ந்த சமயம், அவளது பருவ மலர்ச்சிக்குப் பிறகு அவளிடம் இயற்கை யாகக் குடியேறியிருந்த — அவளைப் பொறுத்த வரையில் அர்த்தமே பெறாத— அந்தக் 'காதல் பார்வை'யை அவள் அவன் மீது வீசியதை யொட்டி ராகவன் மனம் சலனப்பட்டது. ராகவன் நிஜமாகவே நம்பினான், கமலா தன்னை இதய பூர்வமாகக் காதலிக்கிறாள் என்று.

அவ்வாறு நம்பும்படி அவனைக் கட்டாயப் படுத்தியது அவளிடம் கொழுத்திருந்த அபரி மிதமான அழகு.

இல்லையானால் அவனுடைய இயற்கையான சுபாவப்படி அந்த விஷயத்தை — அவன் தன்

கண்களின் வழியே அவனைக் காதலிப்பதாகத் தெரிவித்து விட்டாள் என்பதை — அவ்வளவு எளிதில் தனக்குத் தானே கூட ஏற்றுக்கொள்ளத் துணிந்திருக்க மாட்டான். ஆயினும் அவன் அந்தத் துணிவின் பேரில் அவசரப்பட்டுப் பதில் நடவடிக்கையாக அவளிடம் எவ்வித அசட்டுச் சமிக்ஞையும் காட்டிவிடவில்லை. பொறுமையோடு சமய சந்தர்ப்பத்தை எதிர்நோக்கிக் காத்திருந்தான்.

வேலையில் அமர்ந்த மறு வருடம் அவனுடைய கல்யாண விஷயமாய் வீட்டில் பேச்சு அடிபட ஆரம்பித்தது. இதுதான் தருணம் என்று மெல்லத் தன் தாயிடம் ''பக்கத்து வீட்டுக் கமலாவைப் பண்ணி வைக்க முடியுமான்னு முயற்சி செய்து பாரேம்மா!'' என்றான் ஒரு போக்காக. இந்த 'யோசனை' தாய்க்கு மட்டுமல்ல, தந்தைக்கும் சல்லிசாகவே பட்டது. அவர்கள் சம்பிரதாயப்படி ஒரு நல்ல நாளும் கிழமையும் பார்த்து, முன்கூட்டியே கமலாவின் தந்தையிடம் சொல்லிவைத்துவிட்டு, ராகவனையும் உடன் அழைத்துக் கொண்டு பெண் பார்க்கச் சென்றார்கள்.

பார்த்து வளர்ந்த பெண், பேசிப் பழகிய மனிதர்கள், பக்கத்து வீடு — என்றாலும் அதஅதற்கு ஒரு வழி முறை உண்டல்லவா?

''எனக்குப் பூரண சம்மதம். இருந்தாலும் அவளையும் ஒரு வார்த்தை கேட்டுடறது நல்லதென்று நினைக்கிறேன். அவள் சம்மதம்னு அடுத்த மாதமே கல்யாணத்தை முடிச்சிடுவோம்'' என்று சொல்லி உள்ளே எழுந்து போனார்.

சற்றைக்கெல்லாம் அடுத்த அறையில் தந்தையும்மகளும் பேசியது கூடத்து அறையிலே அமர்ந்திருந்த ராகவனுக்கும் அவனுடைய பெற்றோர்க்கும் தெளிவாகக் கேட்டது.

''ஆமாம்மா! நம்ம பக்கத்து வீட்டுப் பிள்ளையாண்டான் ராகவனைத்தான் சொல்றேன். அவனைப் பண்ணிக்க உனக்குச் சம்மதம் தானே?''

''சம்மதமா, இல்லையாங்கிறது இருக்கட்டும். அப்பா! நான் ஒண்ணு கேட்கிறேன்; அதுக்குப் பதில் சொல்லுங்க!''

''என்னம்மா?''

''அந்த மனுஷர் தினமும் கண்ணாடியிலே முகம் பார்த்துத்தானே தலை வாரிக்கொள்கிறார்?''

''என்ன இதுவிளையாட்டுக்கேள்விகமலா?''

''இல்லேப்பா! நிஜமாத்தான் கேட்கிறேன்.''

''பின்னே, தலைவாரிக்க யாராச்சும் கண்ணாடி பார்க்காமல் இருப்பாங்களா?''

''அப்படி அவர் தம்மோட முகத்தைக் கண்ணாடியில் பார்க்கிறவரா யிருந்தா என்னைக் கல்யாணம் பண்ணிக்கத் துணிஞ்சிருக்க மாட்டாரே!''

''ஏம்மா? அதுக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம்?''

''ஓ!....உங்களுக்கும் அது புரியலையா?'' கமலா கலகலவெனச் சிரித்த ஒலி கேட்டது. ''பாதிக் கிரகணம் பிடிச்சாப்போல இருக்கும் அந்தக் கரி மூஞ்சி மனுஷரை எந்தப் பெண்தான் செய்துகொள்ள மனம் ஒப்புவாள்? கரிச் சட்டியிலே தலையை நுழைச்செடுத்த பூனை மாதிரி — ஒரு பக்கம் தீஞ்சு போன தோசை போல — அணிப்பிள்ளை கொத்திப் போட்ட அழுகின பழம் மாதிரி— இருக்கிற அந்த மூஞ்சியை, முகரக்கட்டையை....''

''உஸ்!.... கமலா....'' — அவளுடைய தந்தை அவளுடைய வாயைப் பொத்தினாற்போல் சட்டென்று பேச்சு அடங்கியது. சிறு பொழுதுக்குப் பின்—

''பாவம், அவர் இன்னிக்காவது போய் ஒரு தடவை கண்ணாடியிலே முகத்தை நல்லாப் பார்த்துக்கிட்டு அதுக்கப்புறமும் என்னைக் கல்யாணம் பண்ணிக்க ஆசையும் துணிச்சலும் உண்டாச்சுன்னா இங்கே பெண் கேட்டு வரச் சொல்லுங்கப்பா! அப்போ நிச்சயமா அவரைப் பண்ணிக்கச் சம்மதிக்கிறேன்.''

கமலாவின் தந்தைதலை குனிந்தபடி கூடத்து அறைக்குத் திரும்பி வந்தபோது அங்கு ராகவனையும் காணோம்; அவனுடைய பெற்றோரும் எழுந்து போய் விட்டிருந்தனர்!

'இவள் எப்படி இங்குவந்தாள்? இவளுக்கும் பட்டாபிக்கும் என்ன உறவு? அவனுடைய மனைவியாக இருப்பாளோ? சே, அவன் மனைவி அந்தப் பிரபல அரசியல்வாதியின் மகள் என்பதுதான் தெரிந்த விஷயமாயிற்றே? பின்னே இந்த வீட்டில் இவள் வந்திருக்கக் காரணம்?'

''நீங்கள் நடித்த படங்கள் எல்லாம் இப்ப தோல்வியையே தழுவுகிறதே! ஏன் சார்?''

''எனக்கு டப்பிங் குரல் தருபவர் மோசம். டூயட்டில் பின்னணி பாடுபவர் தண்டம். மேக்கப் போடுபவர் பிரயோசனமில்லே. டைரக்டர்கள் எல்லாம் கற்றுக்குட்டிகள்... ராசி இல்லாத நாளில் ரிலீஸ் செய்யறாங்க!''






5

இடியும் மின்னலுமாக மழை கொட்ட ஆரம்பித்து விட்டதை சன்னல் வழியே பார்த்துக்கொண்டு பிரமை பிடித்தவன் மாதிரி உட்கார்ந்திருந்த ராகவன், ''என்னை உங்களுக்கு அடையாளம் தெரியறதா?'' என்ற இனிய மென்குரல் கேட்டுச் சட்டென்று திரும்பினான். கமலா தான் அவ்வறையிலிருந்து வந்து ஒரு புறமாக ஒதுங்கி நின்று கொண்டிருந்தாள். அவளது இடிச்சொல்லை எப்படி மறக்க முடியும்? — அவன் பதில் பேசவில்லை.

''பாவம், உங்களை வெரு நேரம் காக்க வைச்சுட்டோம் இல்லையா?''

''அதனாலென்ன, பரவாயில்லே!'' என்றான் ராகவன், கரகரத்த குரலில். ''பட்டாபி வர இன்னும் நேரமாகுமோ?''

''இந்நேரத்துக்கு அவர் வந்துட்டிருக்க வேணும்.''

''ஸ்கூட்டரிலே போயிருக்கிறாரா இல்லே, காரிலா?''

அவள் அவனை வியப்போடு தலையைச் சாய்த்துப் பார்த்துவிட்டுப் பதிலேதும் சொல்லாமல் குறுநகை புரிந்தாள்.

சற்று நேர அமைதிக்குப் பின், ஈரத் தலையைத் துவட்டிக் கொண்டே, கூடத்து அறைக்கு வந்த பெரியவர், ''ஓ...இவர்தானா? ரொம்பச் சந்தோஷம்!'' என்று ராகவனைப் பார்த்து ஒரு வறண்ட சிரிப்புச் சிரித்துவிட்டு அங்கு நிற்காமல் உள்ளே போய் விட்டார்.

அவர் போன பின் சற்றே தாமதமாக வந்த கமலா தயக்கத்துடன் ராகவனை ஓரக் கண்ணால் பார்த்தவாறு சுவரோரம் நின்றாள்.

திகைப்பும் குழப்பமுமாகத் தவித்துக் கொண்டு உட்கார்ந்திருந்த ராகவன் மெல்ல நிமிர்ந்து கமலாவைப் பார்த்து, ''இவர்... இவர்... பட்டாபிராமனோட அப்பாவா?'' என்று குழறிக் கேட்டான்.

''அப்பாவும் இல்லே, தாத்தாவும் இல்லே! இவர்தான் பட்டாபி! இவரைப் பார்க்கத் தானே வந்தீங்க?''

'என் ஆபீஸ் நண்பன் பட்டாபிராமனின் வீடு அல்ல இது. தெருப் பெயர்க் குழப்பத்தில் வேறு யாரோ ஒருவரின் வீட்டிலே வந்து நுழைந்து விட்டிருக்கிறேன். அந்தப் பட்டாபியின் வீடு இதே பகுதியில் வேறு தெருவில் இருக்கலாம். ஆனால் துரதிர்ஷ்ட வசமாக இந்த வீட்டின் நம்பரும் பதினேந்து. இதில் குடியிருப்பவரின் பெயரும் பட்டாபி என்று அமைந்து விட்டனவே! என்ன மோசமான ஒற்றுமை! இந்தத்' தர்மசங்கடத்திலிருந்து எப்படித் தப்பிச் செல்வது? இவ்வீட்டாரிடம் — குறிப்பாக இந்தக் கமலாவிடம்— என்ன சமாதானம் சொல்லிவிட்டு வெளியேறுவது?'

குற்றம் செய்துவிட்ட சிறு குழந்தையைப் போல் திருதிருவென விழித்துக் கொண்டு நின்ற ராகவன் அசடு வழியச் சிரித்தவாறு அவளைப் பார்த்து, ''உங்களுக்கெல்லாம் ரொம்பச் சிரமம் கொடுத்து விட்டேன்... மன்னிக்கணும். நான்... நான்.... தேடி வந்தது இந்தப் பட்டாபியை அல்ல. இவரை எனக்குத் தெரியவும் தெரியாது. விலாசம் தவறுதலா இங்கே வந்துட்டேங்கறது இப்பத் தான் புரியறது'' என்றான் தணிந்த குரலில்.

வியப்புடன் அவனை உற்றுப் பார்த்தாள் கமலா. பிறகு மந்தகாசச் சிரிப்புடன் சற்றே முன்வந்து, ''நல்லா நடிக்கிறீங்களே! பிரமாதமான நடிப்பு!'' என்றாள் கேலியாக. ''ஆனா ஒரு விஷயம்: நீங்க அமெச்சூர் நடிகராயிருக்கலாம். நானோ தொழில் நடிகை. இன்னிக்கு இல்லாவிட்டாலும் நாளையோ மறுநாளோ பெரிய நட்சத்திரமாக ஜொலிக்கப் போகிறவள். சந்தேகமிருந்தா, அதோ அந்தப் படங்களைப் பாருங்க.''

திடுக்குற்றுத் திரும்பிய ராகவன் எதிர்ச் சுவரில் மாட்டித் தொங்கிய சினிமாப் போட்டோப் படங்களைப் பரபரப்புடன் நோக்கினான். அவனுக்கு ஒரே ஆச்சரியமாகி விட்டது. அவள் சொன்னது உண்மைதான். ஏதோ ஒரு திரைப் படத்தில் குரூப் டான்ஸ் ஆடும் ஏழெட்டுப் பெண்களோடு இந்தக் கமலாவும் ஒருத்தியாகக் காட்சி யளித்தாள்.

''இந்த வீட்டிலே இருக்கிற என் மாமா பட்டாபியைஉங்களுக்குத் தெரியாதுங்கறதை வேணுமானா ஒப்புத்துக்கறேன் ஆனா அவரைப் பார்க்க வரல்லேன்னு நீங்க சொல்றதை மட்டும் நான் நம்ப மாட்டேன் வேற யார் மூலமானாலும் கேள்விப்பட்டு — அவரோட பேரையும் தெரிஞ்சுக்கிட்டு — வந்திருப்பீங்க. வந்தப்புறம் இங்கே என்னை எதிர்பாராத விதமாய்ச் சந்திக்க நேர்ந்ததனால் பயந்து எழுந்துஓடப்பார்க்கிறீங்க, அப்படித்தானே?''

ராகவனுக்கு ஒரே குழப்பமாகிவிட்டது. அவளுடைய பேச்சை அவனால் புரிந்து கொள்ளவும் முடியவில்லை. இந்த வீட்டில் இருக்கும் அந்தப் பெரியவர் பட்டாபி பலர் அறிந்த அளவில் பிரபலமானவரா? அவ்வாறானால் அவர் யார்? — அவருடைய தொழிலென்ன?—

ஒரு கணம் திக்கித் திணறிவிட்டு, ''இல்லே கமலா! நிஜமாகவே எனக்கு அவரைத் தெரியாது'' என்றான் அவன் கரகரத்த குரலில்.

அவன் சொன்னதை நம்பாதவள் போல் குறும்பாகச் சிரித்த கமலா ''அதனாலென்ன, பரவாயில்லே! என்னை உங்களுக்குத் தெரியறது இல்லையா? எனக்காக, என்னைத் தேடி வந்ததாகவே நினைச்சுக்கிட்டுக் கொஞ்சநேரம் உட்காருங்க!'' என்றாள் கனிவும் பாசமுமாக.

ராகவனின் கால்கள் ஏனோ தொய்ந்து துவண்டன. நிற்கச் சக்தியற்றவன் போல் அப்படியே சோபாவில் மடிந்து உட்கார்ந்து விட்டான்.

''பலகாரம்தான் சாப்பிடப் பிடிக்கலே, காப்பியாச்சும் குடிக்கக் கூடாதா? இந்தாங்க!'' என்று கொஞ்சலாகக் கூறிய கமலா காப்பித் தம்ளரை எடுத்துத் தானே ஆற்றி

அவன் கையில் கொடுத்தவாறு அதே சோபா வில் சற்றுத் தள்ளி அமர்ந்து கொண்டாள்.

ராகவனின் உடல் இலேசாக நடுங்கியது. அதை மறைப்பதற்காக ''இப்பவே குளிர ஆரம்பிச்சுட்டதே! நல்ல மழைதான்'' என்று மூனகிய அவன் காப்பியைப் பருகலானுன்.

''இப்போ நீங்க என்ன நினைக்கிறீங்க என் றதை நான் சொல்லட்டுமா?'' என்று கேட்டுவிட்டுத் தனது வாளிப்பான உடலை ஓர் அழகுக் கோணத்தில் நெளித்து ஒய்யார மாகச் சோபாவில் சாய்ந்தாள் கமலா.

''ஆமா; அன்னிக்கு நான் நினைச்சிருந்த அந்தப் பைத்தியக்காரத்தனமான அபிப்பி ராயங்களை இப்போ நினைச்சாலும் எனக்கு வாய் விட்டு 'ஒ'ன்னு அழணும் போல இருக்கு. கடந்த ஐந்து வருஷங்களா அதை எண்ணி யெண்ணி நான் அழாத நாளே இல்லே.'' கமலாவின் கண்கள் திடீரெனக் கலங்கிப் பனித்தன. தனக்குத் தானே பேசிக் கொள்கிறவள் போல் தணிந்த தொனி யில் மேலும் சொன்னுள் அவள்:

''அழகுக்கு ஒரு வரையறை கிடையாது. உலகத்தில் இருக்கிற எல்லாமே அழகுதான். ஆனு இது எல்லாருக்கும் தெரியறதில்லே.

''நீங்க தப்பாவோ பொய்யின்னு நினைக்க மாட்டீங்கன்னு நம்பி இதைச் சொல்றேன். இதோ, உங்க முகத்தின் வலப் பக்கத்துச் சிவந்த கன்னத்துக்கு மாருக இடதுபுறக் கன்னத்தின் காது ஓரத்திலே ஒரு கறுப்புத் தழும்பு ஓடியிருக்குதே. அதை — அதிலுள்ள அழகை — இப்ப நான் எவ்வளவு ஆசை மயக் கத்தோட ரசிக்கிறேன் தெரியுமா? எங்கும் எவர் கிட்டவும் காணக் கிடைக்காத அபூர்வ அழகு இல்லையா இது? இந்த அழகின் ரகசியம் அதை அறியவும் உணரவும் கூடிய ஆற்றல்— பத்து வருஷங்களுக்கு முன்னே என்கிட்ட இருந்திருந்தா இன்னிக்கு என் வாழ்க்கை ஆனந்தமாயிருக்கும்! கொடுத்து வைக்காத பாவியாயிட்டேன்; விதி என் கண்ணின் வழியே புகுந்து என்னை வஞ்சித்து நாசமாக்கி விட்டது!''

---

ஜனவரி ஃபூல்:

சென்ற வருடம் காலண்டரை இந்த வரு டக் காலண்டர் என வாங்கி வருபவர்.

கசாப்புக்கடைக்காரர்:

மூளை இல்லே என்று ஒத்துக்கொள்பவர்.

—திருமலை கோவிந்தன்

1982

உணர்ச்சிக் கலவையிட்ட மெல்லிய குரலில் இவ்வாறு கூறிக் கொண்டே தன் வாளிப்பான இடக் கையை நீட்டி ராக வனின் கழுத்தை வளைத்துத் தோளில் சாய்த் துக்கொண்டு அவனது அந்தக் கருந்தழும்பு ஓடிய இடக் கன்னத்தைத் தனது வலக் கரப் பூவிரல்களால் ஆசையுடன் இதமாக வருடினுள் கமலா.

ராகவனின் உடல் புல்லரித்துச் சிலிர்த்தது.

இரண்டொரு நிமிடங்களுக்குப் பின் சுயத் தெளிவு பெற்றவள் போல் சட்டென்று அவனை விலக்கிவிட்டுச் சற்று நகர்ந்து போய்ச் சோபா வின் மறு முனையில் ஒடுங்கித் தலை குனிந்து கொண்டாள் அவள்.

ஒன்றுமே நடவாததுமாதிரி கம்பீரமாக நிமிர்ந்து உட்கார்ந்த ராகவன், அவளைப் பார்த்து அழகாகச் சிரித்தான். ''ஆமா; நீ இங்கே எப்போ குடி வந்தே? அந்தப் பெரியவரும் பெரியம்மாவும் உனக்கு என்ன உறவு?''

அவள் இக்கேள்விக்குப் பதில் ஏதும் சொல் லாமல் இருந்தாள்.

''உன்னுேட அப்பா எங்கே இருக்கார்?'' — என்று மீண்டும் ராகவன் கேட்டான்.

கமலாவின் கண்கள் கலங்கின. ''என் அப்பாவா?...அவர் காலமாகி அஞ்சு வருஷம் ஆகுது.''

''என்ன!'' என்று அதிர்ச்சி யடைந்தான் ராகவன்.

''குவாரியிலே கருங்கல் உடைக்கிறதுக் காக வெடி வைக்கிற வேலே நடந்துக்கிட் டிருந்துச்சு. அந்தச் சமயம் என் அப்பா அதைக் கவனிக்காம யார் கிட்டவோ பேசிக் கிட்டிருந்தார். எதிர்பாராத விதமா வெடி வெடிச்சுட்டுது. நாலு பேர் அதே இடத் திலே மாண்டு போனுங்க. அவங்களிலே என் அப்பாவும் ஒருத்தர்.''

சற்று நேரம் அவர்களிடையே நிசப்தம் சூழ்ந்தது. கமலா தொடர்ந்து சொன்னுள்:

''என் அப்பா காலமானதும், கருங்கல் வியாபாரத்திலே அவரோட பாகஸ்தரா யிருந்தவங்க ஏதேதோ கடன் கணக்குகளைக் காட்டிப் பாங்கிலிருந்த பணத்தைச் சுருட் டிக்கிட்டுப் போயிட்டாங்க. மீதமிருந்த சொத்துக்களை அத்தைமார்களும் சித்தப் பாக்களும் வந்து பங்கு போட்டுக்கிட்டாங்க. எனக்குக் கிடைச்சது சில நகை நட்டுக்களும் ஐஞ்சாயிரம் ரொக்கப் பணமும்தான். என்னை வஞ்சித்த சொந்தக்காரர் எவர் கிட்டேயும் போய் அவங்களோட ஆதரவில் இருந்து வாழ நான் விரும்பலே. கையில் இருந்த பணத்தோடு எங்காவது வெளியூர் போகத் திட்டமிட்டேன். அப்பத்தான் இந்த வீட்டுக் காரர் பட்டாபி எனக்கு அறிமுகமானுர். அவர் சினிமா உலகத்திலே தொடர்பு உள்ள வர். ஏதோ ஒரு கம்பெனியிலே கொஞ்ச காலம் புரொடக்ஷன் மானேஜரா யிருந்த வர். என்னை நடிகையாக்கிவிட முயற்சி எடுத் துக்கிட்டார். கடந்த நாலு வருஷங்களா அந்த முயற்சி நடந்துக்கிட்டுத்தான் இருக்கு. நானும் சில படங்களிலே தலை காட்டிட் டேன். ஆனு, நட்சத்திர யோகம் இன்னும் கிட்டலே.''



## குறுநாவல்

இப்படிச் சொல்லி நிறுத்திய கமலா தனது துயர உணர்ச்சிகளை உதறி யெறிய முயல்பவள் போல் உற்சாகத்துடன் நிமிர்ந்து ''ஓ!... அந்த யோகம் எனக்கு வராமல் போகாது; சீக்கிரம் வந்தே தீரும்!'' என்றாள் கலகலவெனச் சிரித்துக் கொண்டே.

ராகவனுக்கு அவளுடைய வாழ்க்கை நிலை ஒருவாறு புரிந்து விட்டது. அதனால் அவன் மனத்திலே சில வக்கிரமான உணர்ச்சிகள் மூண்டெழுந்தன.. தன்னை ஒரு காலத்தில் அலட்சியப்படுத்தியதற்கும் அவமானத்துக்கு உள்ளாக்கியதற்குமாகச் சேர்த்து இப்போது அவளைப் பழிவாங்கிவிட வேண்டும் என்ற துடிதுடிப்பு! அவளால் கேவலப்படுத்தப்பட்ட தன் பௌருஷத்தைக் கொண்டே அவளைக் கேவலப்படுத்திக் கெக்கலிக்க வேண்டுமென்ற குரூரமான வேட்கை!

வெளியே இடியும் மின்னலுமாக மழை பொழிந்து தள்ளிக் கொண்டிருந்தது.

''மழைச் சாரல் இங்கே. உள்ளே வாருங்கள்!''

தன் உடம்பை ஒரு சிலிர்ப்புச் சிலிர்த்துக் கொண்டு எழுந்த ராகவன், காந்தத்தால் கவரப்பட்டவன் போல் அவளைப் பின் தொடர்ந்து சென்றான்.

இடியும் மின்னலுமாகச் சாடிப் பொழிந்து கொண்டிருந்தது மழை.

**தெ**ருவின் இருமருங்கிலும் இருந்த அழகழகான வீடுகளைப் பார்த்துக் கொண்டே நடந்த ராகவன், பின்னால் ஸ்கூட்டர் ஒன்று வரும் சத்தம் கேட்டுச்சற்றே ஒதுங்கிநின்றான்.

சந்தேகமில்லை; மழைக் கோட்டு அணிந்திருந்த பட்டாபிதான் அந்த ஸ்கூட்டரில் வேகமாக வந்து ஓர் அழகிய பங்களாவினுள் நுழைந்தான்.

அவனைக் கண்டதும் ராகவனின் உடல் ஒரு குலுங்குக் குலுங்கியது. பக்கத்தில் இருந்த மரத்தடியில் போய் நின்றுகொண்டு அந்தப் பங்களாவையே வெறித்துப் பார்த்தான்.

'இந்த நேரத்தில் அவன் எங்கே சென்று வருவான்? கடன் வசூலுக்காக என் வீட்டுக்குப் போயிருப்பானோ?'

அவசரமாக ஜேபியில் கை விட்டுத் துழாவினான். பட்டாபிக்குக் கொடுப்பதற்காகத் தனியே எடுத்து வைத்திருந்த நூறு ரூபாயில் இப்போது ஐம்பது ரூபாய்தான் இருந்தது.

தவித்துக் கொண்டு நின்ற அவன் ஏதோ தீர்மானத்துக்கு வந்தவனாய் அங்கிருந்து விரைந்து நடக்கலானான்.

**ப**க்கத்து வீட்டுக்கடிகாரத்தில் மணி பத்து அடித்தபோது ராகவன் தன் வீட்டு வாசலில் வந்து சோர்வும் களைப்புமாக நின்றான்.

மெல்லப் படிகளில் ஏறிக் கதவைத் தட்டுவதற்காகக் கையெடுத்த அதே சமயம், சீதா வந்து கதவைத் திறந்தாள். கணவனின் பேச்சுக் குரல் கேட்டு அவள் எழுந்து வந்திருக்க வேண்டும்.

''என்னஇது சேறு?'' திகைப்புடன் கேள்வி.

''சேறா.... எங்கே?...'' என்று அப்போதுதான் தன் சட்டையைப் பார்ப்பவன் போல் குனிந்து பார்த்துக் கொண்ட ராகவன், ''ஓ!.... இதா?... இது... எவனோ ஒரு மடப் பய காரைக் கண் மண் தெரியாம ஓட்டிக்கிட்டுப் போனப்ப சேறு வீசியடிச் சுட்டது.'' என்று சலிப்புடன் கூறி மெல்லச் சிரித்தான். உள்ளூரக் கிடுகிடுத்த பய உணர்ச்சியை மறைப்பதற்காகச் சிரித்த போலிச் சிரிப்பு அது.

''உடம்பில் சேறுபடலியே?''

அதிர்ச்சியுடன் திரும்பிச் சீதாவைப் பார்த்த ராகவன் சட்டென்று பார்வையைத் தாழ்த்திக் கொண்டு, சோப்பும் டவலும் எடுத்துப் போய் பாத் ரூமில் வை; நான் குளிச்சுட்டு வரேன்'' என்றான்.

''மழையிலும் காற்றிலுமாக வந்திருக்கிறீங்களே! இந்நேரத்தில் பச்சைத் தண்ணியிலே குளிச்சா உடம்புக்கு ஆகுமா? வேணும் காலம்பற வெந்நீரிலே குளிச்சுக்கலாம்.''

''பரவாயில்லே!'' என்று ஒரே வார்த்தையில் பதில் சொல்லிவிட்டு நேரே குளியலறைக்குப் போய்க் கதவைச் சாத்திக் கொண்டான் ராகவன்.

அவனையே இதமாகப் பார்த்துக் கொண்டிருந்தசீதா ''எங்கே போய் இப்படி உடம்பை அலட்டிக்கிட்டு இவ்வளவு நேரம் கழிச்சு வந்திங்களாம்?'' என்று பரிவும் சிணுங்கலுமான குரலில் விசாரித்தாள்..

ராகவனுக்குச் சட்டென்று எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது. ''போன மாசம் இதே தேதியில் நீ செய்த ஆர்ப்பாட்டத்தையெல்லாம் மறந்துட்டியா?'' என்றான் கோபக் கமறலுடன். உடனே தன் மேலதிகாரியிடம் உணர்ச்சி வயப்பட்டு அவமரியாதையாகப் பேசிவிட்டுப் பிறகு அதனால் தனது உத்தியோகத்துக்கு ஏதேனும் ஊறு நேர்ந்துவிடுமே என்று அஞ்சித் தலை குனிபவன் போல் அவளைப் பயப் பிராந்தியோடு பார்த்துக் குழைப் புன்னகை பூத்தவாறு ''அந்தப் பட்டாபிராமனுக்குக் கொடுக்க வேண்டிய பாக்கியைக் கொடுக்கிறதுக்காக ஆபீஸிலிருந்து அப்படியே அவனோட வீட்டுக்குப் போயிருந்தேன்'' என்று தணிந்த குரலில் கூறினான்.

''நானும் அப்படித்தான் நினைச்சேன்'' என்றாள் சீதா. ''ஆனா, நீங்க போனப்போ அவர் வீட்டில் இருந்திருக்க மாட்டாரே!''

''போன மாசம் போல் சம்பளத் தினமான இன்னிக்கும் அவன் ஆபீசுக்கு வரலே. மட்டம் போட்டுட்டான். அதனால்தான் அவனை வீட்டிலே பார்க்கப் போனேன். அந்தப் பாழாய்ப் போனவனோட வீட்டைக் கண்டு பிடிக்கப் பிரம்மப் பிரயத்தனமாகி விட்டது. முக்கால்மணி நேரத்துக்கு மேலே சுத்தி அலைஞ்சப்புறம் எப்படியோ ஒரு தினுசாக் கண்டு பிடிச்சேன். அந்த முக்கால் மணி நேரத் தாமதத்தை அவனால் பொறுக்க முடியலே. இங்கே ஓடி வந்திட்டிருக்கிறான்''

என்று வெறுப்பும் அலட்சியமுமாகச் சொன்னான் ராகவன்.

''அவர் இங்கே வந்தப்போ எட்டரை மணிக்கு மேல் இருக்குமே?''

''காலிப் பய, எங்கானும் ஊரைச் சுத்திட்டுப் போகிற வழியில் இப்படி வந்திருப்பான்.''

''அவ்வளவு நேரமும் அவரோட வீட்டிலேயே காத்துக் கிடந்தீங்களா?''

''வேற விதி?''

மீண்டும் சிறுபொழுது மௌனமாயிருந்த சீதா, ''அவருக்குக் கொடுக்க வேண்டிய பணத்தைக் கொடுத்திட்டீங்க இல்லையா?'' என்று மெல்லிய குரலில் வினவினாள்.

அதற்கு உடனே பதில் சொல்லத் தோன்றாமல் ஒரு கணம் திக்கித் திணறிய ராகவன், ''ஊம்! கொடுக்கா விட்டால் விடுவானா? அர்த்தராத்திரியானாலும் ஓடி வந்து கதவைத் தட்டிக் கேட்பானே, அற்பப் பயல்!'' என்றான் எரிச்சலுடன்.

நிம்மதியாகப் பெருமூச்சு விட்ட சீதா, ''நீங்க அவரைப் பார்த்தப்போ இங்கே வந்து போன தகவலை உங்ககிட்ட சொல்லலையா?'' என்று மெல்லச்சிரித்துக் கேட்டாள்.

ராகவன் மறுபடியும் விழித்தான். பட்டாபிக்குப் பணம் கொடுத்து விட்டதாக முதலில் ஒரு பொய் சொல்லி யாகி விட்டது. இப்போது அந்தப் பொய்யை மெய்யாக்க இன்னொரு பொய்யின் துணை வேண்டுமே!

சில விநாடி திணறலுக்குப் பின் ''ப்ஸ! வெட்டிப் பேச்சுக்கெல்லாம் நான் இடம் வெச்சுக்கிறதில்லை. அவனைப் பார்த்ததுமே பணத்தை எடுத்து வீசி எறியாத குறையாகக் கொடுத்துட்டு விடுவிடுவென்று வந்துட்டேன். வீடு போய்ச் சேரணும்கிற கவலை எனக்கு!'' என்றான் அலட்சியமாக. ''அந்தச் சில்லுண்டிப் பயலும் இங்கே வந்ததா என்கிட்டே ஒண்ணுமே சொல்லலியே?''

ஒரு பெரிய இக்கட்டான நிலைமையை மிகவும் சாதுரியமாகச் சமாளித்து விட்டது




போன்ற மகிழ்ச்சியுடன், தனக்குத் தானே சிரித்துக் கொண்ட ராகவன் தனது ஜேபியிலிருந்து பணத்தை அப்படியே எடுத்துச் சீதாவிடம் கொடுத்தான்.

பணத்தை ஒரு முறை நிதானமாக எண்ணினாள் சீதா. அத்துடன் தான் போட்டிருந்த கணக்கையும் மனத்துக்குள்ளாகவே மறுமுறை சரிபார்த்தாள். எப்படிப் பார்த்தாலும் ஐம்பது ரூபாய் அதிகமாகவே நின்றது.

உள்ளார்ந்த மகிழ்ச்சியுடன் குறும்புப் புன்னகை பூத்தவாறு கணவனை ஓரக் கண்ணால் பார்த்த அவள், ''இந்த மாசச் சம்பளத்திலே பிராவிடண்ட் ஃபண்டுக்கும் மற்றதுகளுக்கும் பிடிக்க வேண்டியதை சரியாத் தானே பிடிச்சாங்க?'' என்று கேட்டாள்.

''ஆமா.''

''பின்னே, என்கிட்ட நீங்க கொடுத்த பணத்தில் ஐம்பது ரூபாய் அதிகமிருக்கே! சம்பளம், அலவன்ஸ் எதிலாச்சும் கூடுதலாகியிருக்குதா?''

நறுக்கென்று உதட்டைக் கடித்துக்கொண்டான் ராகவன்.

''ஓ.... அந்த ஐம்பது ரூபாயா....? அதை இப்படிக் கொடு!'' என்று அவசரமாக வாங்கி ஜேபியில் வைத்துக் கொண்டு அசட்டுச் சிரிப்புடன் மேலும் சொன்னான்: ''என்னோட நண்பர் மாம்பலம் சுவாமி இருக்கிறாரே, அவரும் பட்டாபிகிட்டக் கைமாத்தா ஐம்பது ரூபா வாங்கியிருந்தாராம். அந்தப் பணத்தை அவன் கிட்டக் கொடுக்கச் சொல்லி என்கிட்ட கொடுத்தார். நான் அதைக் கொடுக்க மறந்துட்டேன். நாளைக்கு அவனை ஆபீசில் பார்த்துக் கொடுத்துடணும்.''

சேறும் சகதியுமான ஒரு பாதாளக் குழியில் குப்புற விழுந்து தட்டுத் தடுமாறி எழுந்தவன் போல் தனது உடம்பை அப்படியும் இப்படியுமாக நெளித்து முறுக்கினான். அவனைச் சுற்றி ஏதோ ஒரு துர்க்கந்தம் வீசுவது மாதிரி முகத்தைச் சுளித்தான். ''அது சரி, சீதா! பட்டாபி இங்கே வந்து உன்கிட்ட என்ன கேட்டான்?'' என்று வெகு அக்கறையாக விசாரித்தான்.

''ஸ்கூட்டர்லே யிருந்து இறங்கி வாசற்படியிலே ரொம்ப நேரம் தயங்கி நின்னுக்கிட்டிருந்தார். நான் கொஞ்சம் தாமதமாய்ப் போய் 'என்ன'ன்னு கேட்டேன். 'மிஸ்டர் ராகவனைப் பார்க்கணும்'னார். 'இன்னும் ஆபீசிலிருந்து வரலே'ன்னேன். 'நான் வந்ததாச் சொல்லுங்க'ன்னு சொல்லிட்டுப் புறப்படத் திரும்பினார். அப்போ மழை பிடிச்சுக்கிட்டது. 'மழைக்கு இப்படிக் கொஞ்சம் வராந்தாவிலே ஒதுங்கி நிற்கலாமா'ன்னு மென்று விழுங்கிக்கிட்டுக் கேட்டார். நான் பதிலேதும் சொல்லாம உள்ளே வந்துட்டேன். மழையிலே நனைஞ்ச ஸ்கூட்டரைத் தள்ளிக்கிட்டு வந்து வராந்தாவில் நிறுத்திட்டு அவரும் அங்கேயே நின்னார். நாலடி அகலமே உள்ள நம்ம வராந்தா, மழைக்கும் உதவாது, வெய்யிலுக்கும் உதவாதுங்கிறதுதான் தெரிஞ்ச விஷயமாச்சே! மழைச் சாரல்லே அவர் நனைஞ்சுக்கிட்டிருந்தார். எனக்கே அதைப் பார்க்கப் பரிதாபமாயிருந்துச்சு. ரூபாய்க்கு இருபத்தைஞ்சு




பைசா வட்டி வாங்கிக்கிட்டு ஐஞ்சோ பத்தோ கடன் கொடுக்கக் கூட முன்னே பின்னே பார்க்கிற இந்தக் காலத்தில் ஒரு பைசா வட்டியுமில்லாமல் வெறும் நம்பிக்கை பேரிலே கணையா நூத்தம்பது ரூபா கொடுத்து உதவின அந்த மனுஷரை இப்படி நன்றிகெட்டதனமா மழைச் சாரல்லே நிற்க வைச்சிருக்கிறோமேன்னு எனக்குக் கொஞ்சம் வருத்தமாகவும் இருந்துச்சு. கூடத்து அறையிலே வந்து உட்காரச் சொல்லி உங்களுக்கு வைச்சிருந்த காப்பியைக்கொடுக்கலாமான்னு நினைச்சு வாசல் பக்கம் எட்டிப் பார்த்தேன். கொட்டிக்கிட்டிருந்த மழையையும் பொருட்படுத்தாம அவர் புறப்பட்டுப் போயிட்டிருந்தார்... அந்த மனுஷரைப் பத்தி நான் இதுவரை நினைச்சிக்கிட்டிருந்ததெல்லாம் அவ்வளவு சரியில்லேன்னு தோணுது. அவர் அம்மாதிரி ஒண்ணும் பொல்லாதவரா தெரியலே. பணத் திமிரோ, இரக்கமில்லாத கல் நெஞ்சமோ கொண்டவராகவும் தோணலே. அவரோட அப்பா மேல் கொள்ள வேண்டிய அபிப்பிராயத்தை அவர் மேல் வைச்சு வீணாக அவரை விரோத குரோதத்தோட பேசிப் பழிச்சிட்டேன், பாவம்!''

ராகவனுக்கு எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது. இவ்வளவு நேரம் தன் மனைவியைப் பார்க்கவே பயந்த அவன் இப்போது அவளை எரித்து விடுவது போல் வெறித்துப் பார்த்தான். பிறகு சட்டென்று முகத்தைத் திருப்பிக்கொண்டு, ''சரி சரி, போய்ப் படு! எனக்குத் தூக்கம் வரது'' என்று சிடுசிடுத்தவாறு படுக்கையில் சாய்ந்தான்.

## 6

ராகவனுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. அயலான் வீட்டில் புகுந்த திருடன் போலீசுக்குப் பயந்து கொண்டு தன் வீட்டிலேயே வந்து ஒளிய முற்படும்போது வேறொரு திருடன் அவனுடைய வீட்டில் கொள்ளையடிக்கப் புகுவதைக் கண்டால் அவனது மனம் என்ன நிலையில் ஆகுமோ அந்தகைய இக்கட்டான தவிப்பில் அப்படியும் இப்படியுமாகப் புரண்டு கொண்டிருந்தான் அவன்.

தான் அடைந்த சிக்கலின் அதிர்ச்சியால் குழம்பிக் கிடந்த அவனுடைய சிந்தனை இப்போது முழுக்க முழுக்கச் சீதாவின் மேல் திரும்பியது.

'நானும் கமலாவும் இன்று எதிர்பாராத விதமாகச் சந்தித்தது போலத்தான் சீதாவும் பட்டாபியும் சந்தித்திருக்கிறார்கள். எங்களுக்கு வாய்த்த அதே முன்னிரவு நேரமே அவர்களுக்கும் வாய்த்திருக்கிறது. வீட்டில் விவரம் அறியாச் சிறுபிள்ளைகளைத் தவிர வேறு யாரும் தடையாக இருக்கவில்லை. மழையும் சாதகமாகப் பெய்திருக்கிறது. கமலா என்னிடம் பணத்துக்காக நெருங்கி உறவாடினாள். அன்பு காட்டுவது போல் நடித்தாள். பசப்பிப் பேசினாள். சீதாவும் பணம் கடன்பட்ட நிலையில் பட்டாபியிடம் நின்று பேசியிருக்கிறாள். இது தவிர அவர்களுக்கு இது இரண்டாவது சந்திப்பு. அதனால் அவர்களின் பேச்சு, பார்வை, பாவனை எல்லாமே கொஞ்சம் தாராளமாக, சகஜமாகப் பரிமாறப்பட்டிருக்கும். மேலும் பட்டாபி உல்லாசப் பிரியன்; ஜாலிப் பேர்வழி. செல்வப் பளபளப்பு மிக்கவன். அத்துடன் அவன் நல்ல ஆணழகன். ஆகவே.....'

தனது படுக்கை விரிப்புக்கு அடியில் ஏதோ விரியன் பாம்பு நெளிவதைக் கண்டுவிட்டவன்போல் திடுமென எழுந்து உட்கார்ந்தான் ராகவன்.

குழந்தைப் பிள்ளைகளுக்கு நடுவே படுத்திருந்த அவள் தன் கைக்குழந்தையை மார்போடு அணைத்துக் கொண்டு நிஷ்களங்கமான நித்திரையில் ஆழ்ந்திருந்தாள்.

அன்றிரவு ராகவன் தூங்கினானா, விழித்துக்கொண்டிருந்தே பொழுதைக் கழித்தானா என்று அவனுக்கே தெரியாத ஓர் அவஸ்தை நிலையில் படுக்கையை விட்டு எழுந்தான்.

குழம்பிய மனத்துடன் ராகவன் ஆபீசுக்குக் கிளம்பிச் சென்றான். அங்கு போனதுமே அவனை வேறோர் அச்சம் கவ்வியது. பட்டாபி கடனைத் திரும்பக் கேட்பானோ என்று!

ஆச்சரியம்தான்! பட்டாபி அவனிடம் அன்று பாக்கிப் பணத்தைக் கேட்கவில்லை. நேற்றிரவு அவன் அதற்காக அவனுடைய வீட்டுக்குப் போனது பற்றியும் சொல்லவில்லை. மத்தியானம் கான்டீனில் அசந்தர்ப்பமாக அவனை நேருக்கு நேர் பார்த்தபோதுகூட ஒன்றுமே வாய் திறக்கவில்லை. ராகவன்தான் கோழி திருடின கள்ளன் மாதிரி திருதிருவென விழித்தான். ஆனால் 'அவனோ ஒரு புன்முறுவல் பூத்ததோடு போய்விட்டான்.

ஐந்து ரூபாய்க் கடனாக இருந்தாலும் நிற்க வைத்துப் பிடுங்குவதில் அசகாய சூரனான பட்டாபி நூறு ரூபாய் பாக்கியை எப்படிக் கேட்காமல் விட்டுப் போனான்? இவனிடம் அவன் இவ்வளவு பெருந்தன்மையாக நடந்து கொள்ளக் காரணம் என்ன? அதுவும், இதற்காக நேற்று வீடேறி வந்தவன் இன்று ஒன்றுமே கேட்காமல் போயிருக்கிறானே?—

ஒரு நாள் ராகவன் கேவலமான காரியம் ஒன்றைச் செய்தான். அதாவது தன் மூத்த பையன் கோபுவைத் தனியாக அழைத்துப் போய்த் திண்ணையில் உட்காரவைத்துக்கொண்டு முதலில் வேறு ஏதேதோ கேள்வியெல்லாம் கேட்டுவிட்டு, பிறகு, அன்றொரு நாள் இருட்டின வேளையில் ஸ்கூட்டரில் வந்த பட்டாபியிடம் அவனுடைய அம்மா என்ன பேசினாள், மழை பெய்தபோது அந்த ஸ்கூட்டர் ஆசாமி எங்கே நின்றிருந்தான் என்றெல்லாம் இரகசியமாக விசாரித்தான்.

கோபுவுக்கு வயது ஆறுதான். ஆனால் மிகவும் சுட்டிப் பயல். எனவே அவன் பட்

டாபி வந்தது, தன் தாயிடம் கேட்டது, அவள் பதில் சொன்னது, அப்புறம் மழைக்கு ஒதுங்கி நின்ற இடம், மழை கொஞ்சம் விட்டதுமே புறப்பட்டுப் போனது அவ்வளவையும் அன்று சீதா ராகவனிடம் சொன்ன அதே தகவல்களை — அப்படியே படபடவென்று சொல்லிவிட்டான்.

ஏதோ பெரிய துப்பறியும் புலிபோல் கேள்வி கேட்ட ராகவனின் முகம் தொங்கிப் போயிற்று.

செப்டம்பர் மாதம் இருபதாம் தேதி. அது அரை நிதி ஆண்டு முடிவடையும் மாதமானதால் அந்தக் காரியாலயத்தில் வேலைகள் வெகு மும்முரமாய் நடைபெற்றுக் கொண்டிருந்தன. ஆனாலும் வழக்கப் போல் பட்டாபி அன்று அரை நாள் லீவு எடுத்துக் கொண்டு போய் விட்டிருந்தான்.

இதை அறிந்த ராகவனால் அங்கு இருப்புக் கொள்ள முடியவில்லை. அவனுக்குத் தர வேண்டிய கடன் தொகையைக் கேட்கும் சாக்கில் தன் வீட்டுக்குப் போயிருப்பானோ என்ற சந்தேக உறுத்தலினாலேயே அவன் அவ்வாறு தவிப்படைந்தான்.

ராகவனுக்கு ஒரு குரூரமான எண்ணம் தோன்றியது.

'இந்தச் சமயம் நான் வீட்டுக்கு வர மாட்டேன் — வர முடியாது — என்று அவர்கள் இரண்டு பேருமே நினைத்துக் கொண்டிருப்பார்கள். அப்படி என்னை எதிர்பார்க்காத நேரத்தில் திடீரென்று போய் நின்றால் அவர்களைக் கையும் களவுமாகப் பிடித்து விடலாம்.'

அளவு கடந்த ஆத்திரத்தாலும் உணர்ச்சிக் கொந்தளிப்பாலும் ராகவனுக்குத் தலை சுற்ற

### வேடிக்கையான நிபந்தனை

சமீபத்தில் குவாடிமாலா நகரில் ஹோன்டூரன் ஜனாதிபதியின் மகளைச் சிலர் கடத்திச் சென்றுவிட்டனர். அவளை விடுவிக்க ஒரு விசித்திரமான நிபந்தனையை விதித்தனர். அதாவது ஜனாதிபதி ரோபர்டோ ''நான் ஒரு முதலாளி வர்க்கத்தின் கோமாளி'' என்று பகிரங்கமாகச் செய்தித் தாளில் அறிவிக்க வேண்டுமென்று கோரினார்கள். அதன்படியே செய்தித் தாளில் விளம்பரம் வெளியிட்ட பின் அவர் மகள் விடுதலையானாள்!

ஆதாரம்: ஹிந்து
தகவல்: விஜயா சீனிவாசன்




லும் நெஞ்சு வலியும் ஏற்பட்டதென்னவோ உண்மைதான். ஆனால் தன் சகாக்கள் பயந்து பேசிக்கொள்கிற அளவுக்கு அப்படியொன்றும் பெரிய அபாயகரமான நிலைமையில்தான் இல்லை என்பதை அவனே நன்றாக உணர்ந்தான். ஆயினும் இதையே ஒரு சாக்காகக் காட்டி இரண்டு மணி நேர லீவ் வாங்கி கொண்டு போய்விடலாமே என்று தோன்றவே, அவன் அதிக தலை சுற்றலாலும், நெஞ்சு வலியாலும் அவதிப்படுகிற மாதிரி வெகு சாமர்த்தியமாய் நடிக்க ஆரம்பித்து விட்டான்!

மாம்பலம் சுவாமியும், ஆலந்தூர் சுவாமியும் அவனைக் கைத்தாங்கலாகப் பிடித்து வெளியே அழைத்து வந்து ஆட்டோவில் ஏற்றி அனுப்பி வைத்தனர்.

'இப்போது நான் திடும் பிரவேசமாய் என் வீட்டுக்குப் போய், அங்கே சீதாவும் பட்டாபியும் தப்பிக்க முடியாமல் கையும் மெய்யுமாய்ப் பிடிபட நேர்ந்து விட்டால் அப்புறம் என்ன செய்வது?'—

தூக்கி வாரிப் போட்டாற் போல் ஒரு குலுங்குக் குலுங்கி நிமிர்ந்தான் ராகவன். காரணம், அந்த நெடுஞ்சாலையின் ஒரு முச்சந்தியில் போக்கு வரத்துக்கான போலீஸ்காரரின் 'நிறுத்து' சமிக்ஞையைக் கண்டு ஆட்டோ தனது வழக்கமான திமிர் குலுக்கலுடன் நின்றது.

அந்தச் சாலையின் எதிர்ச் சாரியிலிருந்து ஒன்றன் பின் ஒன்றாகக் கார்களும் பஸ்களும் லாரிகளும் சாலை வட்டத்தின் வலப்புறமாக மெல்ல வந்து கொண்டிருக்க, அவற்றுக்கிடையே ஒரு ஸ்கூட்டரும் வந்தது. அந்த ஸ்கூட்டரைச் செலுத்தி வந்தவன் பட்டாபிராமன். அவனுக்குப் பின்னால் அவனது தோளை அணைத்தவாறு ஓர் அழகிய பெண்மணி உட்கார்ந்திருந்தாள். சந்தேகமில்லை; அவள் அவனுடைய மனைவிதான்!.

தன்னை அவன் கண்டுவிடாதபடி நன்றாக மறைந்துகொண்டு மீண்டும் அவர்களைப் பார்த்தான் ராகவன். அவனது கண்கள் அவனை ஏமாற்றவில்லை.

'இது என்ன விந்தை! பட்டாபி என் வீட்டுக்குப் போகவில்லை; சீதாவைச் சந்திக்கவில்லை; அவன் தன் மனைவியோடு சினிமாவுக்குப் போகவே அரை நாள் லீவு எடுத்துக் கொண்டு போயிருக்கிறான் என்பதை, இதோ, கண்ணுக்கு மெய்யாகக் காண நேர்ந்தும் இதற்காக நான் ஆறுதலோ மகிழ்ச்சியோ நிம்மதியோ அடையாமல் அதிர்ச்சியும் தளர்ச்சியும் ஏமாற்றமும் அடைகிறேனே, ஏன்?' தன்னில்தானே ஒரு கோர சொரூபத்தைக் கண்டு மிரட்சியுற்றவனாக அவன் ஆட்டோவை நிறுத்தி பணத்தைக் கொடுத்து அனுப்பிவிட்டு நடந்தான்.

பிற்பகல் மூன்று மணி இருக்கும். வறுத்தெடுத்த வெயிலில் வாடித் துவண்டு நடந்து கொண்டிருந்த ராகவன் தன் வீடு நெருங்கியதும் தயங்கி நின்றான்.

'இந்த வேளை கெட்ட வேளையில் வீட்டுக்குப் போனால் சீதா என்ன நினைப்பாள்? கேள்விக்கு மேல் கேள்வியாகப் போட்டுத்




துணைத்தேடுப்பாள். அவற்றுக்கெல்லாம் என்ன சொல்லிச் சமாளிப்பது?

வெகு நேர நடைக்குப் பின் கால்கள் சோர்ந்து பின்னலிட்டதை உணர்ந்து சுற்று முற்றும் திரும்பிப் பார்த்தான். அவனுக்கு ஒரே ஆச்சரியமாகி விட்டது. காரணம், அவன் வந்து நின்ற இடம், கங்கா நகரின் குருநாதன் தெரு! அதுவும் அந்தக் கமலா குடியிருந்த வீட்டின் எதிரில்!

மாலைப் போதின் பெரும் பகுதி கரைந்து விட்டது. இன்னும் சற்று நேரத்தில் இருள் பூசத் தொடங்கிவிடும். ஒருவித வெறித்தனமான குதூகலத்துடன் கமலாவின் வீட்டையே பார்த்துக் கொண்டிருந்தான்.

'பாவம், அவள்தான் எவ்வளவு நல்ல பெண்! வாழ்க்கையைப் பற்றிச் சரியாகப் புரிந்து கொள்ள முடியாத இளம் பருவத்தில் செய்த ஒரு தவறுக்காக — எனது கன்னத்தில் இருக்கும் கருந்தழும்பைக் காட்டி என்னை மணந்து கொள்ள மறுத்த பிசகுக்காக — இப்போது அவள் எவ்வளவு வருந்திக் கண்ணீர் வடிக்கிறாள்! அவளுடைய தலைவிதி இத்தனை கோரமாகப் பழிவாங்கும் என்றோ, அதனால் இவ்வளவு பயங்கர அதள பாதாளத்துக்குத் தள்ளப்பட்ட நிலைமை தனக்கு நேரிடும் என்றோ அவள் கனவுகூடக் கண்டிருக்க மாட்டாள்! அது கடுகளவேனும் தெரிந்திருந்தால் அந்தத் தவற்றைச் செய்திருக்கவும் மாட்டாள்! நானும் அவளும் திருமணம் செய்து கொண்டு வாழ்க்கையைத் தேன் கதலிக் குலையாகச் சுவைத்துக் கொண்டிருந்திருப்போம்! புற அழகில் மயங்கிச் செய்த அச்சிறு பிழையால் காலமெல்லாம் அவளது வாழ்க்கை கெட்டுக் குட்டிச்சுவரானது மல்லாமல், எனது வாழ்க்கையும் பயங்கர நரகமாகிவிட்டது!'

''ஹலோ, மிஸ்டர் ராகவன்! என்ன, இந்த நேரத்தில் இங்கே வந்திருக்கீங்க?'' என்று கலகலப்பான குரலில் கேட்டான் பட்டாபிராமன்.

ராகவனின் மனம் எரிந்தது. பதில் பேசவில்லை.

''என் ஸ்கூட்டர் பின்னாலே உட்காருங்களேன்! உங்க வீட்டிலே கொண்டு போய் இறக்கிடறேன்?''

சீதாவை மறுமுறையும் தரிசிப்பதற்கு இந்தக் குயுக்தியா?—ஓங்கி அவன் கன்னத்தில் அறைய வேண்டும் போல் கொதிப்படைந்த ராகவன் தன்னை ஒருவாறு அடக்கிக்கொண்டு ''தாங்க்ஸ்!உங்களுக்கு அந்தச் சிரமம் வேண்டாம்!'' என்றான்.

பட்டாபியின் முகம் அவமானத்தால் சுண்டிச் சிறுத்தது. ராகவன் பஸ் ஏறிப் போகும் வரை அவனையே வெறித்துப்பார்த்துக்கொண்டிருந்துவிட்டு ஒரு வேதனைப் பெருமூச்சுடன் மெல்ல ஸ்கூட்டரைக் கிளப்பிச் சென்றான்.

அடுத்த மாதச் சம்பளத்துக்கு இன்னும் ஐந்து நாட்களே இருந்தன.

அன்று காலை ஆபீசில் ராகவன் தன் வேலையில் மும்முரமாக இருந்தபோது பட்டாபி அவசரமாக வந்து, ''மிஸ்டர் ராகவன் உங்க கிட்ட ஒரு ஐஞ்சு நிமிஷம் தனியாப்பேசணும். வீட்டுக்குக்கிளம்பறப்ப சந்திக்கிறேன்'' என்று சொல்லி விட்டுப் போனான்.

வெகு நேரம் காத்திருந்தும் அவனைக் காணோம். கடைசியாக ஒரு பியூனிடம் விசாரித்தபோது, 'அவர் முன்பே போய்விட்டார்' என்ற தகவல் கிடைத்தது.

ராகவன் அப்படியே மலைத்து நின்றான். 'என்ன இது, குறும்புத்தனம்! ஏதோ என்னிடம் பேசப் போவதாகச் சொன்னவன் எனக்கு முன்னால் போய் விட்டிருக்கிறானே!'— ஆத்திரம், கோபம், திகில், அவமானம், குழப்பம் எல்லாமாகச் சேர்ந்து அவனை நிலைகுலையச் செய்து விட்டன.

மறுநாள் பட்டாபி ஆபீசுக்கு லீவு போட்டு விட்டான். ராகவனுக்கு இதுவும் மனத்தில் சந்தேக அரிப்பைக் கிளறியது. அன்று மாலை சீக்கிரமே வீட்டுக்குப் போகப் பரபரத்தான். ஆனால் சோதனையாகப் பஸ்ஸில் இடம் கிடைக்காமல் முக்கால் மணி நேரத்துக்கு மேல் திண்டாடிவிட்டு இருட்டிய பிறகு வீடு போய்ச் சேர்ந்தான்.

முகம், கை, கால்களை அலம்பிக்கொண்டு கூடத்து அறையில் வந்து 'உம்' என்று உட்கார்ந்தான் ராகவன். காப்பி கொண்டு வந்து கொடுத்த சீதா, அவன் பருகி முடிக்கும் வரையில் மௌனமாக நின்றிருந்துவிட்டுப் பிறகு சாவதானமாக ஒரு தகவலைச் சொன்னாள்:

''கொஞ்சம் முன்னாடி உங்க நண்பர் பட்டாபிராமன் உங்களைத் தேடிக்கிட்டு இங்கே வந்தார்...''

அவள் சொல்லி முடிப்பதற்குள் ராகவனுக்குச் சுர்ரெனக் கோபம் தலைக்கேறி விட்டது. சாய்வு நாற்காலியிலிருந்து திடுமென நெம்பி, நிமிர்ந்து உட்கார்ந்த அவன், ''அந்த அயோக்கிய ராஸ்கல் இங்கே எதுக்கு வந்தான்?'' என்று வெறிக் குரலில் கூவினான்.

சீதா அவனை அமைதியாக ஏறிட்டுப் பார்த்தாள். பிறகு, ''என்னைக் கேட்டா, எனக்கென்னதெரியும்? அவர் கிட்டப்போய் அதைக் கேளுங்க!'' என்று சொல்லிக் கொண்டே அங்கிருந்து உள்ளே சென்று விட்டாள்.

ராகவனுக்கு இப்போதுதான் ஒரு விஷயம் நறுக்கென்று மூளையில் தைத்தது:

'ஓ!... அவன் கடன் பாக்கியைக் கேட்க வந்திருப்பானோ?... அப்படியானால் சீதாவுக்கு என் குட்டு வெளிப்பட்டு விட்டிருக்குமே!'

## 7

அன்று அந்தக் காரியாலயத்தில் 'நவரஸ நாடகக் காட்சிகள்' வழக்கம்போல் நடைபெறும் நாள்; அதாவது, முதல் தேதி, சம்பளத் தினம்.

சம்பளப்பட்டி எப்போது கையெழுத்திட்டுப் பணத்தை வாங்கப் போகிறோம் என்று வெகு துடிப்போடு விநாடி விநாடியாக எண்ணிக் கழித்துக் கொண்டிருந்தான் ராகவன். காரணம் பட்டாபியிடம் அந்த நூறு ரூபாய் கடன் பணத்தை வீசியெறிந்து விட வேண்டும் என்பதே.

ஆபீஸ் நேரம் முடிந்தது. அவசரமாக எழுந்து போய் வெளி வாயிலண்டை நின்று கொண்டான் ராகவன். பட்டாபி வந்ததும் ''உங்களுக்காகத்தான் காத்துக்கிட்டிருக்கேன். இந்தாங்க நூறு ரூபா!'' என்றவாறு பணத்தை எடுத்து அமர்த்தலாக நீட்டினன். ''போன மாசமே கொடுத்திட்டிருப்பேன். எதிர்பாராத இழப்பு ஒண்ணு ஏற்பட்டுப் போச்சு. அதனால்தான் கணக்கம்.''

''ஓ!....பரவாயில்லே!'' என்று சொன்ன பட்டாபி பணத்தை வாங்கி ஜேபியில் போட்டுக் கொண்டான். ''மிஸ்டர் ராகவன் என்னோடு அதோ அந்த ஹோட்டல் வரை வருகிறீர்களா? காப்பி சாப்பிட்டு விட்டுப் போகலாம்'' என்றான்.

ராகவனுக்கு உள்ளூர ஆத்திரம் குமுறியது. இருந்தாலும் வேண்டா வெறுப்பாக அவனுடன் ஹோட்டலுக்குச் சென்றான்.

ஒரு பெரிய ஹோட்டலில் இருவரும் மாடிப் பூங்காவுக்குச் சென்று அமர்ந்தனர்.

பட்டாபியின் தடபுடல்தான் தெரியுமே! எல்லாம் ஸ்பெஷல் பட்சணங்களாவே ஆர்டர் கொடுத்து மேஜையை நிரப்பி விட்டான்.

''ஏன் மிஸ்டர் ராகவன்! என்னைப் பற்றி உங்க ஒய்ஃப் எப்பவாச்சும் ஏதானும் உங்க கிட்டச் சொல்லி யிருக்காங்களா?'' என்று கேட்டான் தட்டுத் தடுமாறிய குரலில்.

ராகவனின் முகம் கறுத்துச் சிறுத்தது. தன்னைத் தானே எச்சரித்துக் கொள்கிறவன் போல் மெல்லக் கனைத்துக் கொண்ட அவன், ''ஹூம். ''நிறையச் சொல்லியிருக்கிறாள்'' என்றவாறு அவனையே விழிபசைக்காமல் பார்த்தான்.

---

கால்ப் ஆட்டம் ரெஃபரியோ அல்லது அம்பயரோ இல்லாமல் ஆடப்படுவது!

-மஞ்சுதேவன்



''அயோக்கியன், அக்கிரமக்காரன், பணத்திமிர் பிடிச்சவன், இருதயம் இல்லாதவன்—என்றெல்லாம் பேசியிருப்பாங்க, இல்லையா?'' என்று கேட்டு மெல்லச் சிரித்த பட்டாபி மேலும் கூறினன்: ''அத்தனை அர்ச்சனைகளையும் ஏத்துக்கக்கூடிய தகுதி உள்ளவன்தான் நான்!... நான் மாத்திரமில்லே; என்னோட அப்பாவும், என் மாமனரும்கூட அதுகளில் பங்கு பெற வேண்டியவர்களே!''

அவனுடைய வாயிலிருந்து வந்த சொற்களில் ஒன்றுகூடத் தன் செவியை விட்டு நழுவிச் சென்றுவிடாதபடி மிகவும் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தான் ராகவன்.

''என்ன செய்யறது? யார்யார் தலையிலே விதி எதை எழுதியிருக்கிறதோ அதுபடிதானே நடக்கும்? ஆன ஒண்ணு: உங்க ஒய்ஃபோட தலைவிதி நல்லாவே இருந்திருக்குது. இல்லேன்ன அவங்க என் மனைவியாகி இருக்கணுமே!''

இதுவரை நீக்கனல் ஜ்வாலை விட்டுக்கொண்டிருந்த ராகவனின் நெஞ்சில் இப்போது திடுமெனப் பனிக்கட்டி யொன்று விழுந்தாற்போல் சில்லென உறைத்தது.

''எனக்கு இவ்வளவு காலமாய்த் தெரியாது, சீதா உங்க மனைவின்னு! போன மாசம் கடன் வசூலுக்காக உங்களோட வீட்டுக்குப் போனப்பத்தான் விஷயம் தெரிஞ்சது. நிஜமாகவே நான் ரொம்பவும் சந்தோஷமடைஞ்சேன். ஆன....''

சட்டென்று பட்டாபியின் குரல் இடறியது. உடனே தொண்டையைக் கமகப்படுத்திக்கொண்டு தொடர்ந்தான் அவன்:

''ஆமா, மிஸ்டர் ராகவன்! உங்க மனைவி சீதாவுக்கு அவங்களோட அப்பாவுக்கு — நானும் என் அப்பாவும் ஆயிரம் தீமை செய்திருக்கலாம்; அதுக்கெல்லாம் அவுங்க என்னை வஞ்சம் தீர்த்துக் கொள்ளவும், பழிவாங்கவும் வேண்டியதுதான். ஆன, நானும் ஒரு மனுஷன்; எனக்கும் மனம் இருக்கு, மானம் இருக்குங்கிறதை மறந்துடவோ மறுத்துடவோ கூடாது. என்னை ஒருதடவை இல்லே, ரெண்டு தடவை இல்லே, மூணு முறை அவங்க — அதாவது, உங்க ஒய்ஃப் — பார்த்த போதும், ஒரு புழுவை விடக் கேவலமா மதிக்க நடத்தியதையும் பேசினதையும் இப்போ நினைச்சாக்கூட என் இரத்தமே உறையறாப் போல இருக்கு.''

பொங்கி வந்த ரோஷத்தை அடக்கிக் கொள்கிறவன் மாதிரி ஒரு புன்னகை பூத்துவிட்டு மேலும் சொன்னன் பட்டாபிராமன்:

''கேளுங்க மிஸ்டர் ராகவன்! உங்க மனைவி என்னை நடத்தின விதம் பற்றி நிஜமாவே நான் பெருமைப்படறேன். அப்படித்தான் அவங்க நடத்த வேணும்; அதிலே தப்பு இல்லே. ஒரு பெண் கிட்டே இத்தனை தன்மானமும் ரோஷமும், சுய கௌரவமும் வீம்பும் இருக்கிறதைப் பார்த்து நான் ஆச்சரியப்பட்டுப் போனேன். ஏன்ன, இதுவரை நான் பார்த்துப் பழகிய — என்னோட மனைவி உட்பட — எந்தப் பெண் கிட்டேயும் அதுகளை இந்த அளவுக்குக் கண்டதில்லே. அது வேற விஷயம். இப்போ நான் சொல்ல வந்தது

என்னுன்னு. இவ்வளவு நன்மான, வீம்புச் செருக்குக் குணங்களோடு கொஞ்சம் மன்னிக்கிற தன்மையையும் அவுங்க கைக்கொள்ளக்கூடாதாங்கிறதுதான். உங்களோடு பேசி என் மனசுக்குச் சிறிதளவு ஆறுதல் தேடிக்கிறதுக்குத்தான் சில நாட்களுக்கு முன்னே உங்களை உங்க வீட்டிலும், பிறகு, ஆபீசிலும் தனியாச் சந்திக்க முயற்சி பண்ணினேன். அது சாத்தியப்படலே. இன்னிக்கு சந்தர்ப்பம் கிடைச்சதுக்காகச் சந்தோஷப்படறேன்.''

ராகவனுக்கு இப்போது எல்லாம் புரிந்து விட்டது. இருவரும் வெளியே வந்து விடைபெற்றுப் பிரிந்தார்கள்.

**சா**லையில் நடந்துகொண்டிருந்த ராகவன் திடுமென்று நின்றான். இத்தனை நாட்களாகத் தன் தலைமீது ஏறியிருந்த பெரியதொரு பாறாங்கல் இப்போது அங்கிருந்து புரண்டு சரிந்து நெஞ்சின் மேல் விழுந்து அழுத்திக் கொண்டது போல் இருந்தது அவனுக்கு.

சீதாவின் உருவம் ஒளி மயமாக அவனது கண்ணைப் பறிப்பது போல் ஒரு பிரமை! ஆனால், அவனுக்கு அவன் எங்கே நிற்கிறான் என்றே தெரியவில்லை; அவ்வளவு காரிருந்த காரமான இருட்டு.

'நான் செய்த தவற்றை — என் மனைவி சீதாவுக்கு இழைத்த துரோகத்தை—இனியும் மறைக்காமல் அவளிடமே சொல்லி மன்னிப்புக் கேட்டு விடலாமா? அதனால் விளையும் விபரீதம்..

நான் செய்த குற்றத்துக்குத் தனக்குத் தானே தண்டனை விதித்துக்கொள்ள அவன் முடிவு செய்தான்.

அந்தத் தண்டனை? மரண தண்டனை!

ஆம்; அவன் செத்துவிடத்தீர்மானித்தான். சீதாவோடு இனி வாழ வேண்டுமானால் அவன் சாகத்தான் வேண்டும். செத்தால் தான் அவனால் வாழ முடியும்.

'இறந்த பின் வாழ்வா? ஆமாம்: எனக்கு இனி இறந்த பின்பே வாழ்வு கிட்டும்!'—

8

**“அ**ம்மா! வாசல்லே யாரோ வந்திருக்காங்க!'' என்று வெளியே எட்டிப் பார்த்து விட்டுச் சொன்னான் கோபு.

''அப்பாதான் வந்திருப்பாங்க! நான் போய்ப் பார்க்கிறேன்'' என்றவாறு எழுந்து ஓட முற்பட்டான் ராமு.

அவனைப் பிடித்து இழுத்துப் பின்னால் நிறுத்திவிட்டு வராந்தாவுக்குச் சென்றாள் சீதா.

அங்கே சீதாவுக்கு அறிமுகமில்லாத ஒரு பெரியவர் நின்றிருந்தார். ஆனால், அவளுடைய கணவனுக்குத் தெரிந்தவர்தாம்; கமலாவின் இப்போதைய மாமாவான பட்டாபிராமனே அவர்!

''ராகவன் சார் இருக்காரா?''

''நீங்க யாரு?''

''அவரைப் பார்க்க வந்திருக்கேன்.''

''நீங்க யாரு, என்ன காரியமா வந்தீங்கன்னு சொன்னா, அவர் வந்ததும் சொல்றேன்'' என்றாள்.

மீண்டும் அந்தப் பெரியவர் சற்று நேரம் யோசித்துவிட்டு,''என் பேர் பட்டாபிராமன். நான் வந்துட்டுப் போனதா சொல்லுங்க'' என்றவாறு பின்னால் நகர்ந்தார். ''முடிஞ்சா அவரை எங்க வீட்டுக்கு வரச் சொல்லுங்க!''



குறு நாவல்

புரிந்து கொள்வதற்கும் தெரிந்து கொள்வதற்கும் உள்ள அர்த்த வேறுபாட்டைப் பற்றி ஒரு கணம் யோசித்துக் குழம்பிய சீதா ''சரி; சொல்றேன்'' என்றவாறு சட்டென்று உள்ளே திரும்பி வந்துவிட்டாள்.

**சீ**தாவின் மனக் குழப்பம் அதிக நேரம் நீடிக்கவில்லை. இரவு ஒன்பது மணிக்கு ராகவன் வீடு வந்து சேர்ந்தான்.

அவன்மிகவும் களைத்துக் காணப்பட்டான். ஆனால் முகத்தில் அமைதியும் தெளிவும் விரவியிருந்தன. பல தினங்களுக்குப் பின் இன்று சீதாவைப் பார்த்து ஓர் இளநகை பூத்தான்.

அவளுக்கு அது சஞ்சீவி உட்கொண்டது போல் ஆயிற்று. இத்தனை நாட்களும் அவளது மனத்தில் குடிகொண்டிருந்த துயரமும் அந்த ஒரே நொடியில் போன இடம் தெரியாமல் மறைந்து போயின.

''சாயந்திரம் ஏழு மணி வாக்கில் உங்களைப் பார்க்க....'' என்று அவள் புன்னகையுடன் பேச்சை ஆரம்பித்து முடிப்பதற்குள் சட்டென்று குறுக்கிட்டு ''பட்டாபிராமன் வந்தானா?'' என்று அவசரமாகக் கேட்டான் ராகவன்.

''வந்தானவா?'' என்று புன்னகையும் வியப்புமாகத் திருப்பிக் கேட்டாள் சீதா. ''அவரும் அயோக்கியர்தானா?''

திடுமென்று விழித்துக் கொண்ட ராகவன் சற்று நிதானப்படுத்தி, ''நீ யாரைச் சொல்கிறாய் சீதா? என்னோட ஆபீஸ் நண்பன்—அதாவது, உன் 'குடும்ப எதிரி — பட்டாபிராமன்தானே?'' என்றான் கண்களை இடுக்கிக் கொண்டு.

''இன்னிக்குவந்த பட்டாபிராமன் வேறே! வயசானவராயிருந்தார். உங்களை நல்லாத் தெரியுமாம். ஏதோ காரியமாய்ப் பார்க்க வந்தாராம். முடிஞ்சா, அவரோட வீட்டுக்கு உங்களை வரச் சொல்லிட்டுப் போனார்.''

சற்று முன் பழுத்துச் சிவந்து பயங்கரமாகக் காணப்பட்ட ராகவனின் முகம் இந்த ஒரே விநாடியில் சவக் களை பெற்று வெளிறிச் சிறுத்தது.

'இன்று முதல் தேதி. எனக்குச் சம்பள தினம். போன மாசம் இதே தேதியில்தான் கமலாவின் வீட்டுக்குப் போனேன். அவள் அளித்த வாடகை இன்பத்துக்காக ஐம்பது ரூபாயை இழந்தேன். அந்த ருசியை அவள் மறக்கவில்லை போலும்! முதல் தேதியான இன்றும் என்னை எதிர்பார்த்திருப்பாள். நான் வராமற் போகவே தன் ''மாமா''வை என்

வீட்டுக்கே அனுப்பி யிருக்கிறான். அவனுக்குத் தான் எவ்வளவு துணிச்சல்!

சீதா ஒருநாளைக்கு இரு முறை குளிக்கும் பழக்கம் உள்ளவள். இத்தனை நாட்களும் இரவுச் சமையல் வேலைகள் முடிந்ததும், ஏழு அல்லது ஏழரை மணி வாக்கில் குளித்து விடுவாள். இன்று தன் கணவனை எதிர்பார்த்துக்கொண்டு கவலையில் ஆழ்ந்திருந்து விட்டதால் அந்தக் குறிப்பிட்ட நேரம் தவறிப் போயிற்று. எனவே இப்போது அவசரமாக எழுந்து குளிக்கப் போனாள்.

இந்தச் சமயங்களில் அவளுக்கு மாற்றுடை எடுத்து வைப்பது ராகவனின் வேலை. இது ரொம்ப நாளாக நடைபெற்று வருகின்ற காரியம்.

இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன்னே வெள்ளை நிறத்தில் சிறு சிறு பூப்போட்ட பிரிண்ட்டட் வாயில் புடவை ஒன்று பல தடவை சலவைக்குப் போய் வெள்ளை வெளேரென வெளுத்து விட்டிருந்தது. அதனால் சீதா அதை உடுத்துவதில்லை. பெட்டிக்கு அடியில் போட்டு விட்டிருந்தாள். அந்த 'வெள்ளை'ப் புடவையை இப்போது ராகவன் தேடி எடுத்தான். அதற்குத் தோதாக ஒரு வெள்ளைச் சோளியும் கிடைத்தது.

பத்தே நிமிடங்களில் குளித்து முடித்த சீதா, குளியல் அறையில் இருந்தவாறே "இந்த வெள்ளைப் புடவையை நான் கட்டிக் கொள்கிறதில்லையே!" என்று அன்புடன் சிடுசிடுத்தாள்.

"என்னவோ, கைக்குக் கிடைச்சதை எடுத்தேன். இன்னிக்கு ஒரு நாள் உடுத்திக் கொள்ளேன்!" என்று சாதாரணமாகப் பதிலிறுத்தான் ராகவன்.

அதற்கு மேல் மறுப்பு ஏதும் சொல்லாமல் அதையே அணிந்து கொண்டாள் சீதா. இருவரும் சாப்பிட்டு முடித்தார்கள்.

நாளெல்லாம் செக்கு மாடாகச் சுழன்று வீட்டு வேலைகள் செய்த களைப்பு: இத்தனை நாட்களும் கணவனின் பராமுகப் போக்குகளால் கிளர்ந்திருந்த கவலையும் பயமும் முற்றும் தீர்ந்த நிம்மதி. எனவே, அவள் சீக்கிரம் தூங்கிப் போனாள்.

ஆனால், ராகவன் தூங்கவில்லை. அவனுக்கு எப்படித் தூக்கம் வரும்? அவன்தான் இன்று சாவது என்று முடிவு எடுத்து விட்டிருக்கிறானே!—

நேரம் நகர்ந்தது. இரவு ஒரு மணி. அவன் மெல்ல எழுந்தான். ஓசைப்படாமல் போய்ப்படுக்கையறை 'ஸீவரோ-வாட்'விளக்கைச் சற்றே அதிக ஒளியில் திருகி வைத்து விட்டு வந்தான்.

கீழே ஜமுக்காள விரிப்பில் குழந்தைப் பிள்ளைகளோடு ஒரு குழந்தைப் பிள்ளை மாதிரி படுத்து ஆழ்ந்த நித்திரையில் லயித்திருந்தாள் சீதா.

சற்றே தைரியம் அடைந்தவனைப் போல் அடிமேல் அடி வைத்துச் சீதாவிடம் நெருங்கி வந்து அவளுடைய முகத்துக்கு நேரே குனிந்து அவளது நிலாப் பிறை நெற்றியின் நடுவே புவள மணி போல் பளிச்சிட்டுக் கொண்டிருந்த குங்குமத் திலகத்தைத் தனது கட்டு விரலால் இலேசாக அழித்தான்.

சீதா தூங்கிக் கொண்டிருந்தாள்!...

அடுத்து, அவளது கால்மாட்டுப் பக்கம் பூனைபோல் ஓசையின்றி நடந்து போன ராகவன், அவளது அழகிய கால் விரல்களில் அணிந்திருந்த மெட்டிகளை வெகு பக்குவமாக உருவிப் போட்ட பிறகு கைகளில் இருந்த ஒற்றைத் தங்க வளைகளையும் லாகவமாகக் கழற்றி விட்டான். சீதாவின் மார்பின் மேல் பொற் பசலைக் கொடி போல் நெளிந்து கிடந்த தாலிக் கயிற்றைக் கத்தரிக்கோலால் 'நறுக்'கென்று ஒரே வெட்டாக வெட்டிக் கத்தரித்து மெல்ல இழுத்துக் கீழே போட்டு விட்டுச்சடாரென அப்பால் நகர்ந்து போய்க் கட்டிலில் உட்கார்ந்து கொண்டு அவளையே வைத்த கண் வாங்காமல் பார்த்தான்.

வெள்ளைப் புடவை, வெள்ளைச் சோளி, திலகமற்ற பாழ் நெற்றி, வளைகளற்ற வெறுங் கைகள், மெட்டி மோதிரங்கள் இல்லாத கால் விரல்கள், மஞ்சள் கயிற்றை இழந்த வெறுங் கழுத்து — இத்தகைய தொரு வைதவ்யக் கோலத்தில் சீதா இன்னமும் நிம்மதியாக உறங்கிக் கொண்டுதான் இருந்தாள்!....

சீதாவின் கணவன் எங்கே? அவன் 'செத்து'ப் போனான்! கற்பின் நெறி தவறிய அந்தக் கசடன் இறந்தேபோனான்! அதோ, தலை முதல் கால் வரை வெள்ளைப் போர்வையால் போர்த்தப்பட்டுப் படுக்கையிலே சவம் மாதிரி அவனது உடல் கிடந்தது!

பொழுது புலர்ந்தது.

காலையில் சீதா கண் விழித்ததுமே முதலில் வள்ளி தேவானை சமேதராய் நிற்கும் முருகப் பெருமானின் படத்தைப் பார்ப்பாள்: பிறகு நிலைக் கண்ணாடியைப் பார்ப்பாள்.

அந்தப் பழக்கத்தைத் தொடர்ந்தாள் அவள். அடுத்த கணம் 'ஹா' என்ற ஓர் அலறல்! சீதாதான் அப்படி அலறிக் கூவினாள்.

"ஐயோ! நான் யார்? நான் யார்?" என்று அரற்றிக் குமுறியபடி தனது நெற்றியையும் கழுத்தையும் பரபரப்புடன் தொட்டுத் தடவிப் பார்த்துக் கொண்டே படுக்கை அறைக்குப் பாய்ந்தோடி வந்தாள்.

அங்கே அவள் படுக்கை மீது கால் விரல் மெட்டிகளும் கை வளைகளும் கழன்று கிடந்தன! அவற்றுடன் அறுந்த தாலிக் கயிறும் ஒருபுறம் விழுந்து கிடந்தது! சீதா அவற்றை ஆவேசத்துடன் தாவி எடுத்தாள்.

"என்ன சீதா! என்ன நடந்துச்சு?" என்று மெலிந்த குரலில் கேட்டவாறு பிணம் உயிர் பெற்று எழுவது போல் தட்டுத் தடுமாறி எழுந்து வந்தான் ராகவன். அவன் முகம் இரத்தப் பசையின்றி வெளுத்திருந்தது. இரவெல்லாம் ஒரு பொட்டுத் தூக்கமும் தூங்காமல்அழுதுகொண்டிருந்த மாதிரிகண்களிரண்டும் நெருப்புத் துண்டங்களாகச் சிவந்து காணப்பட்டன.

"ஒன்னுமில்லீங்க! ஒன்னுமில்லே!" என்று குமுறிக் கொண்டே தன் கையில் இருந்த மாங்கல்யக் கயிற்றையும் மெட்டிகளையும் மறைக்க முயன்றாள் சீதா.

ராகவன் மெல்லச் சிரித்தான். அந்தச் சிரிப்புடன் அவனது முகத்தைப் பார்க்கவே மிகப் பரிதாபமாக இருந்தது.

''ஓ.... தாலி அறுந்து போச்சா?..... இதுக்கா இப்படி அலறினே!... தூக்கத்திலே படுக்கறச்சே எதிலாவது மாட்டி அறுந்துட்டிருக்கும்!... பரவாயில்லே! இப்படிக் கொடு அந்தத் தாலியை நான் மறுபடியும் கட்டறேன்!''...

இதமான குரலில் இவ்வாறு கூறிக்-கொண்டே சீதாவின் கையிலிருந்த தாலிக் கயிற்றை வாங்கி அவளது கதலித் தண்டு போன்ற கழுத்தில் மூன்று முடிச்சுக்கள் போட்டுக் கட்டினான். பிறகு மெட்டிகளையும் வளைகளையும் அவளுடைய கால் விரல்களிலும் கைகளிலும் அணிவித்தான்.

சீதா ஜன்னி கண்டவளைப் போல் கிடுகிடுவென நடுங்கிக் கொண்டே தலை குனிந்தவாறு நின்றாள்.

''ஆமா, சீதா! உனக்கு ஒரு விஷயம் தெரியுமா? இன்னிக்கு என்னோட பிறந்த நாள். இந்த நல்ல நாளிலே உனக்கு ஒரு பரிசு தரப் போறேன்'' என்று இளநகையுடன் கூறிய ராகவன் அமைதியாகப் போய், நேற்றுமாலை வாங்கி ஆபீஸ் பையில் மறைத்து வைத்திருந்த புதுப் புடவையை எடுத்து வந்து அவளிடம் கொடுத்தான். ''இந்தா! இதை முதல்லே உடுத்திக்கிட்டு வா! நான் இப்பவே பார்க்கணும்!''

அவனது இந்தப் பூடகமான பேச்சும் செயலும் சீதாவுக்குத் தில்லையும் குழப்பத்தையும் உண்டு பண்ணின. அவளால் எதையும் புரிந்து கொள்ளவே முடியவில்லை. தனது மாங்கல்யத்தைத் தன்னிலிருந்து அகற்றிச் சில மணி நேரம் தன்னை விதவையாக்கியது தன் கணவன்தானோ என்ற சந்தேகமும் அவளுள் எழுந்து அவளை மேலும் பீதிக்குள்ளாக்கியது.

'இவருக்கு இன்னிக்குப் பிறந்த நாளாமே! எந்த வகையிலே பிறந்த நான்னு சொல்றார்? இவர் ஏன் இப்படிச் செத்துப் பிழைச்சு எழுந்து வந்தவர் மாதிரி காட்சியளிக்கிறார்?'

இன்னமும் நடுக்கம் நீங்காமல் வெலவெலத்து நின்ற சீதா, மறு பேச்சு எதுவும் பேசத் தோன்றாமல், மருட்சியுடன் குளியல் அறைக்கு விரைந்துபோய்ச்சற்றைக்கெல்லாம் குளித்துப் புதுப் புடவையும் குங்குமத் திலகமும் அணிந்து புது மணப் பெண்ணைப் போல் அவனெதிரே வந்து நின்று குலுங்கிக் குலுங்கி அழுதாள். அழுது கொண்டே அவனுடைய காலில் விழுந்து வணங்கினாள்.

ராகவனின் கண்கள் கலங்கி நீரைச் சொரிந்தன. அவன் மெல்லக் குனிந்து அவளை அன்புடன் தழுவித் தூக்கித் தனது நெஞ்சோடு சாய்த்து அணைத்துக் கொண்டான்.

குழந்தைப் பிள்ளைகள் அப்போதுதான் தூக்கம் கலைந்து, முல்லை மலர்வது போல் சிரிப்பும் சிணுங்கலுமாக எழுந்தன.

(எனது சிறுகதையொன்றின் நாவல் வடிவம்)

**(முற்றும்)**

# 'என்னதான் இருக்கு சிலுக்கிடம்?'

⌘ எம். இராஜேந்திரன், காஸ்குடி

? ஜப்பான் எழுத்துக்களைப் பார்த்தால் ஓர் எழுத்து எழுத சுமார் ஒரு நிமிஷம் ஆகும் போலிருக்கிறதே?

! ஓர் எழுத்து என்று நாம் நினைப்பது உண்மையில் பல எழுத்துக்களின் அல்லது வார்த்தைகளின் கூட்டாகவும் இருக்கும். அண்மையில் ஜப்பானிய மொழியில் அச்சான திருக்குறள் புத்தகத்தை வள்ளியப்பா காட்டினார். தலை கால் புரியவில்லை என்றாலும் தலை கொள்ளாத அளவில் பெருமையாகத்தான் இருந்தது.

⌘ ஆர். நாகராஜன், பராஜூர்

? பொங்கல் பண்டிகைக்குப் புதிய படங்கள் அதிகம் வரவில்லையே, ஏன்?

! தீபாவளி படங்கள் வாங்கிய அடியில் மிரண்டு விழுந்த படாதிபதிகள் இனி தான் தூசி தட்டிக் கொண்டு எழுந்திருக்க வேண்டும்.

⌘ வெ. லலிதா, சத்துவாச்சாரி

? பண்பாடு நிலையான ஒன்றல்ல என்று எழுதியிருக்கிறீர்கள். ஆனால் என்னுடைய தமிழ் புத்தகத்தில் வேறு மாதிரி குறிப்பிடப்பட்டுள்ளதே?

! வாழ்க்கையைப் புரிந்துகொள்ள நான் கூறியதை ஏற்கவும். பரீட்சைக்குப் பதில் எழுதப் பாடப் புத்தகம் சொல்வதையே ஒப்புக்கொள்ளவும். மார்க் குறைந்துவிடப் போகிறது!

⌘ என். சந்திரன், பம்பாய்-17

? தமிழ் நாட்டு ரசிகர்கள் சிலுக்கு சிலுக்கு என்று பறக்கிறார்களே, அப்படி என்னதான் இருக்கிறது சிலுக்கிடம்?

! சிலுக்கிடம் என்னதான் இருக்கு என்று கேட்கும்படியாகவா அவர் வைத்துக்கொள்கிறார்? அதனால்தான் பரபரப்பு!

⌘ ஜி. குமரேசன், பாண்டமங்கலம்

? ஓவியத்துக்கு உயிர் இருந்தால் மறைந்த ஓவிய மேதை சில்பியைப் பற்றி என்ன நினைக்கும்?

! உங்கள் கேள்வி சற்றே திருத்தப்பட இடமிருக்கிறது. சிற்பத்தைச் சித்திரமாக்கியவர் சில்பி. சிற்பத்தை உயிரோவியமாக்கியவர் மணியம். எத்தனையோ கோயில்கள் புண்ணிய ஸ்தலங்களுக்கு நேரில் போக முடியாதவர்களும் நேரில்சென்று தரிசித்த பாக்கியம் பெற்றனர் சில்பியின் தயவால். சில்பியின் சிற்ப சித்திரங்களுக்கு நல்லாதரவு அளித்து அம்மேதையை ஊக்குவித்ததன் மூலம் மக்களையும் மகிழ்வித்து ஆத்திகம் பரப்பியவர் விகட'ன் அதிபர் எஸ்.எஸ். வாஸன். சரி, இனி உமது கேள்விக்கு வருகிறேன்.

'அற்புதக் கலைஞரான சில்பி பத்திரிகைப் பொருளாதாரத்தைக் கொஞ்சம் புரிந்து கொண்டு கீழிறங்கி வந்து ஒத்துழைத்திருந்தால் அவர் கலைத் திறனைப் பத்திரிகை உலகு இன்னும் சிறப்பாகப் பயன்படுத்திக் கொண்டிருக்குமே' என்று அவர் சித்திரங்கள் உயிர் பெற்றால் எண்ணும்.

⌘ ஆர். கே. லிங்கேசன், மேலகிருஷ்ணன்புதூர்

? தாராக வளைந்து கொடுப்பதாக வலம்புரிஜான் பழி சுமத்தியிருக்கிறாரே?

! அப்படியா? மன்னிக்கவும். என் கண்ணில் படவில்லை. நீங்கள் கூறுவது உண்மையாயின் தம் பார்வையை நேராக்க அவர் கண்ணாடி மாற்ற வேண்டியதுதான்.

⌘ எம். சிவஞானமுருகன், ஸ்ரீவைகுண்டம் ★

? தனி மனிதரைச் சார்ந்து ஒரு கட்சி உருவாவதைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

! அந்தத் தனிமனிதர் நிலைதடுமாறுதவரையில் இதில் தவறேதும் இல்லை. அவர் தம்மைச் சார்ந்து மட்டுமே கட்சி நீடித்து நிற்காது என்பதைப் புரிந்து கொண்டு அதற்கு நிலையான உயர்ந்த கொள்கைகளை வகுத்து உட்கட்சி ஜனநாயகத்தையும் அதன் மூலம் சிறந்த தளபதிகளையும் வளர்த்துவிட வேண்டும். இவ்வாறின்றி அத்தனி நபர் தம்மால்தான் கட்சி மக்களிடையே ஆதரவு பெறுகிறது என்று கர்வத்துடன் எண்ணி ஏதேச்சாதிகாரம் செலுத்துவாரேயானால் சீக்கிரமே வீழ்ச்சி யடைவார். கட்சியின் சரிதமும் அவருடனேயே முடிந்து போகும்.

⌘ ஏந்தல் ஆர். இளங்கோ, திருச்சி

? கண்டிப்பாகப் பாராட்ட வேண்டிய நிகழ்ச்சி எது?

○ சிலுக்கு



○ சில்பி



○ பாபா



○ வாஜ்பாயி



# நீங்கள் கேட்டவை — தராசு



○ ஹெக்டே



○ சோ



○ பி. கே. நேரு



○ இந்திரா

! பகவான் சத்திய சாயி பாபா தலைமையில் இயங்கும் சத்திய சாயி டிரஸ்ட் சென்னையில் ஒரு சேரியை ஸ்வீகரித்துக் கொண்டதைச் சொல்லலாம். கேசவப் பெருமாள் புரம் ''திமர் நக''ரில் உள்ள நூறு குடும்பங்களுக்குப் பல நல்வாழ்வுத் திட்டங்களை சாயி டிரஸ்ட் அமல்படுத்தும். இந்த ஸ்வீகரிப்புப் பணியைக் குழந்தைகளுக்குப் புத்தகங்கள் வழங்கித் தொடங்கி வைத்தார் பகவான் பாபா.

✖ ஆர். வி. புவனா, சென்னை-33

? காஞ்சிப் புதுப் பெரியவரைக் கலைஞர் கண் மூடித்தனமாகத் தாக்கியது-பற்றிக் கல்கி மௌனம் சாதிப்பதன் காரணம் என்னவோ?

! பதில் பெறுவதற்குக் கூட லாயக்கற்ற மட்டரகமான பேச்சானதால் அதனைப் புறக்கணிப்பதே சரி, என்ற முடிவுக்கு வந்ததுதான்.

✖ வி. ஏ. ராஜு, பம்பாய்-89

? ஆந்திரா, கர்நாடகா தேர்தல் முடிவுகளுக்குப் பின் இந்திராகாந்தி பதவியை ராஜினாமா செய்யாமலிருப்பது முறையா?

! இந்திரா ராஜினாமா செய்ய வேண்டும் என்றவாஜ்பாயின் கோரிக்கையில் நியாயம் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. நாடாளுமன்றத் தேர்தலையும் சட்ட மன்றத் தேர்தலையும் வித்தியாசப்படுத்தி, கொள்கை அறிந்தும் தலைவர் தகுதிகள் அறிந்தும் வோட்டுப் போட மக்கள் கற்றுக் கொண்டிருப்பதைத் தமிழகம் ஏற்கனவே நிரூபித்துள்ளது.

✖ கே. ஆர். ஜனார்த்தனன், தஞ்சை

? கர்நாடக முதல்வர் ஹெக்டே பற்றி...?

! போகப் போகத்தான் அவர் ஆட்சியை விமரிசிக்க முடியும். என்றாலும் கார்த்திகேயன் மீது நடவடிக்கை, பங்காரப்பா அமைச்சரவையில் சேரக் கதவைத் திறந்து வைத்திருப்பது ஆகிய ஆரம்பச் செயல்களில் விவேகம் காண்கிறோம்.

✖ ஞானவி பார்த்தசாரதி, கடலூர்

? சோ மீது போடப்பட்ட தேசியக்கொடி அவமதிப்பு வழக்கு தள்ளுபடி ஆனது ஏன்?

! சோ தேசியக் கொடியை அவமதிப்பது என்பது வேறு. 'பிரதமர் தமது நடவடிக்கைகளால் தேசியக் (கௌரவத்தை) கொடியை அவமதித்து விட்டார்' என்று சோ சொல்வது வேறு. இரண்டுக்கும் இடையே உள்ள வித்தியாசத்தை நீதிபதி புரிந்து கொண்டதுதான் வழக்குத் தள்ளுபடியாகக் காரணம்.

✖ இளஞ்சேரன், கோபி

? பிரதமர் பதவிக்கு வரை முறைக்காலம் வேண்டும் என்ற பி. கே. நேருவின் யோசனை பற்றி...?

! நிறைவேற்றப்பட வேண்டிய சீரிய கருத்து. இரண்டு பதவிக் காலத்துக்கு மேல் எப்போதும் வேண்டாம் என்பது பிரதமருக்கு மட்டுமின்றி முதல்வர்களுக்கும் பொருந்தும்படி செய்ய வேண்டும்.

? தென் மாநிலங்களில் காங்கிரஸின் வீழ்ச்சிக்கு இன்னும் காரணம் தேடுவது பற்றி?

! மனத்துக்குள் தேட வேண்டியதை வெளியில் தேடினால் அகப்படப் போவதில்லை.

✖ வி. குருமூர்த்தி, புதுவை

? இந்திரா இனிமேல் தலைநிமிர முடியுமா?

! அவர் எப்போது தலை குனிந்தார், நிமிர்வதற்கு? ஒன்றா, இரண்டா, எத்தனையோ அவமானங்கள். எதற்குமே என்றுமே அவர் தலை குனிந்ததில்லையே!

✖ என். நம்பி, திருவாரூர்.

? பூவாளி, சுஜாதாவுடன் இணைந்து விட்டதாமே?

! 'நின்றுவிட்டது' என்பதை நாகரிகமாக 'இணைந்து விட்டது' என்கிறார்கள். சொல்லி விட்டுப் போகட்டுமே. நமக்கென்ன நஷ்டம்? பாரி வள்ளல் ஜூனியர் விகடனில் சேர்ந்ததுதான் காரணம் என்று கேள்வி.

✖ நல்லாலம் காசிதாசன், வந்தவாசி

? நெஞ்சத்தில் வஞ்சம் சேரும்போது எதைத் தஞ்சம் அடைய வேண்டும்?

! போலவேயே எதிர்க்கும் அதிருப்தியாளர்கள் இந்திராவிடம் தஞ்சம் அடைந்து உமக்குப் பதில் கூறியுள்ளனர்.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்

எம். சிவஞானமுருகன்,
35, சிவன்கோயில் தெரு,
ஸ்ரீவைகுண்டம்-628 601

# நியூ (ஸ்பேப்பர்) கவிதைகள்!



கிராந்திரங்கா தலைவர்
கிராக்கி பண்ணிக்கொள்ளும்வரை
ராமகிருஷ்ண ஹெக்டேக்கு
ராவும் பகலும் ஹெட்டேக்கு!



தொழிற்சாலை தொடங்கி
ஆண்டுவிழா கொண்டாடுவோர்
மத்தியில்,
பஞ்சாலைத் தொழிலாளர்
ஸ்ட்ரைக்குக்கு ஆண்டுவிழா
கொண்டாடுகிறார்
தத்தா சாமந்த்!



இம்மென்றால் எல்.பி.டபிள்யூ
ஏனென்றால் கிளீன்போல்டு—
இம்ரான்கான் சாகிப்,
இந்திய பாட்ஸ்மென்னை
இப்படியா பந்தாடுவது!



பவர்கட் வைத்தே
ஷாக்கடிக்கிறார்
பண்ணுருட்டியார்.
நீதிக்கட்சி
ஜோக்கடித்தே
சிரிக்க வைக்கிறார்
ராமாவரத்தார்!

-சாருகேசி

---

தாய்: ''என் அன்பு மகனே! காதலித்ததும்தான் காதலித்தாய், சமைக்கத் தெரிந்த பெண்ணைப் பார்த்துக் காதலித்திருக்கக் கூடாது?''

மகன்: நீ வேற... எனக்குச் சமைக்கத் தெரியும்" என்பதால்தானே அவளே என்னைக் காதலித்தாள்!''

—சக்தி கமலேஸ்வரன்





# குனியமுத்தூரில் கும்மியடித்த போது...

க. கிருட்டினசாமி, கொங்கு நாட்டில் பல்வேறு சிற்றூர்களில் பாடப்படும் நாட்டுப்புறப்பாடல்களைச் சேகரித்துத் தொகுத்து ஆராய்ச்சி செய்து சென்னை பல்கலைக்கழகத்தில் பி.எச்.டி. பெற்றார். இவர், கோவை கொங்குநாடு கலை அறிவியல் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணிபுரிகிறார். இவரது அனுபவங்கள்:

● ''புதிதாக எந்த ஊருக்குப் போனாலும் உடனே தகவல் தெரிந்து கொள்ள முடியாது! அந்த ஊரில் நமக்கோ நமது நண்பர்களுக்கோ தெரிந்தவர்களின் மூலமாகத்தான் அணுக வேண்டும். ஒரே ஊருக்குக் குறைந்தது இரண்டு மூன்று தடவையாவது செல்ல வேண்டியிருக்கும். பகல் நேரம் பயனில்லை. காடு கரைகளிலிருந்து கிராமவாசிகள் மாலையில்தான் வீடு திரும்புவார்கள். இரவுதான் ஏற்ற நேரம்.

பாடல்களாக இருந்தாலும் கதைகளாக இருப்பினும் டேப் செய்வதுதான் நல்லது. சொல்லச் சொல்ல எழுதினால் சுகமில்லை. தாமதமாகும். கிராம வாசிகளை மகிழ்விக்க அவர்கள் பேசியதையும் பாடியதையும் டேப் ரிக்கார்டரில் உடனுக்குடன் போட்டுக் காட்டினால் போதும். குஷி வந்து மேலும் மேலும் பல அரிய தகவல்களைச் சொல்வார்கள்.

## குனியமுத்தூரில் கும்மி!

● கும்மிப்பாடல்கள் சேகரிப்பதற்காக குனியமுத்தூருக்குப்போயிருந்தேன். எனது நண்பர் ஒருவர் கிராமத்துப் பெண்களை ஒரு வீட்டில் கும்மியடிக்கக்கூப்பிட்டு வந்தார். டேப்ரிக்கார்டரை 'ஆன்' செய்துவிட்டுப் பாடலைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தேன். நேரம் ஆக ஆக கும்மிப்பாடல் என்னை மெய்சிலிர்க்கவைத்தது.



⌘ புலவர் கிருட்டினசாமி

கும்மியடிப்பது வெறும் பொழுதுபோக்கு மட்டுமல்ல. ''மழை வேண்டிப் பாடப்படும் மாய மந்திரம்'' என்று பழைய ஏடுகளில் படித்திருக்கிறேன்.

''கொடக் கொடன்னு மழை பேயோ
கொட்டத்துத் தண்ணி பெறண்டோட
கொட்டத்துக்கார நம்மண்ணமாரு
குமிஞ்சு கும்மி கொண்டாடச் சொன்னாரு''

''பாட்டு நல்லா இருக்கு'' – பாராட்டினேன். மேலும் மேலும் ஆவேசம் வந்தது போலப் பெண்மணிகள் கும்மியடித்துப் பாடினார்கள்.

நள்ளிரவு.

அதுவரை வெளுத்துக் கொண்டிருந்த வானம் கருக்க ஆரம்பித்தது. கொட்டியது பேய் மழை! அதிசய நிகழ்ச்சி!

## 12.-12.

● கீழக் கோத்தகிரியில் நீலகிரி மலை வாழ் மக்களிடம் ஒரு சமயம்மாட்டிக்கொண்டேன். படகர்களின் ஆட்டத்துக்கு இருளர்கள்தான் இசை வாசிப்பார்கள். இது மரபு.

அனைவரும் ஆடத் தயாரானார்கள். திடீரென்று வாத்தியம் வாசிப்பவர்கள் எழுந்தார்கள். ''சும்மா டீ குடிச்சுட்டு வர்றோம்'' என்றார்கள். அது டீ இல்லை. அவர்களது விருவிருப்பு டானிக். →

சரக்கு உடலில் ஏறியதும் பேயாட்டம் தான்! நிலை தடுமாறிப் போய்விட்டேன். மயக்க நிலையிலிருந்த அவர்கள் என்னையும் கட்டாயப்படுத்தி ஆடவைத்து விட்டார்கள். தப்பினால் போதும் என்றாகி விட்டது!

## நெருப்பூரில் சூட்ட செய்தி

● கார்த்திகை தீபம் ஒரு நெருப்பு விழா. நெருப்பின் பெயராலேயே நெருப்பூர் என்ற ஊர் இருப்பதை அறிந்ததும் எனது மூன்று மாணவர்கள் மற்றும் நண்பர்களுடன் அங்கு முகாமிட்டேன்.

அந்த ஊரில் பல ஆண்டுகளாக ஆசிரியராகப் பணி புரியும் ஆசிரியர் எங்களிடம் ஒரு புதுத் தகவலைச் சொன்னார்.

''அந்த ஊரில் கார்த்திகை தீபத்தன்று மட்டும் கூத்துப் பாட்டுப் பாடப்படும். (மற்ற நாட்களில் இதைப் பாடக் கூடாதாம்.) அன்று கிராம வாசிகள் யார் யாருடன் வேண்டுமானாலும் உடலுறவு கொள்ளலாம் என்றார் நண்பர். என்றாலும் இச் செய்தியை நம்ப முடியவில்லை.

பல கிராம வாசிகளை விசாரித்தேன். சிரித்து மழுப்பி விட்டார்கள்.

இந்தப் பழக்கம் வேளாண்மையை மனித குலம் கண்டுபிடித்த காலத்தில் ஏற்பட்ட சடங்கு. இவர்களது செயலைப் பார்த்துப் பயிர்களும் விலங்குகளும் இனப் பெருக்கம் செய்யும் என்ற மூட நம்பிக்கையில் எழுந்தது. அக்காலத்து மக்களின் அறிவு அவ்வளவுதான். ஆனால் அந்த வழக்கம் இன்றும் தொடர்கிறது என்றால் எவ்வளவு வியப்பாக இருக்கிறது? இச் செய்தியை எப்படித் தமிழகத்துக்கு அறிவிப்பது என்ற சிந்தனையே எனக்குப் பல நாட்கள் தூக்கமின்மையை உண்டாக்கி விட்டது.

## தர்மபுரியில் தர்ம சங்கடம்!

● இரவு நேரம். கையில் டேப் ரிக்கார்டர். கோவை செல்லும் கடைசி பஸ் போய்விட்டது. தர்மபுரியில் ஒரு மூலைக் கடையில் டீ குடிக்கப் போனேன்.

''யாரையா அது? நடய்யா போலீஸ் ஸ்டேஷனுக்கு'' என்றார் ஒரு போலீஸ்காரர், திடீரென்று. நேரம் சூழ்நிலை அப்படி. நான் நாட்டுப் பாடல் சேகரிப்பு விஷயத்தைச் சொன்னேன். அவர் நம்பவில்லை. ''சரி, நம்மைச் சந்தேகக் கேஸ் என்று நினைக்கிறார் போலும்'' உள்ளூரச் சிரிப்பு வந்தது.

''கொஞ்சம் இருங்க.''

டேப்பைத் தட்டிவிட்டேன்.

கூத்துப் பாடல் சுற்றுப்புறம் முழுவதும் பரவியது. போலீஸ்காரரும் டேப்புடன் சேர்ந்து பாடினார். சிறு வயதில் அவரும் இதையெல்லாம் அனுபவித்துக் கற்றவராம்.

தமது தவற்றை உணர்ந்த போலீஸ்காரர் மீண்டும் என்னை டீக்கடைக்கு அழைத்துப் போய் டீ வாங்கிக் கொடுத்ததுடன் அதிகாலை வரை எனக்குக் காவலாகவும் இருந்து பஸ் ஏற்றி விட்டார்!

**பேட்டி: மன்னை சௌரிராஜன்**




டைட்டிலில் காட்டும்போது நூற்றுக் கணக்கான 'சில்க்' பெயர்கள் மின்னி மின்னி மறைகின்றன. அந்த அளவு சிலுக்குக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளதைப் பார்த்துப் பிரமிக்கிறோம்.

வெறும் வைரக் கடத்தல் கதை!

கடத்த உதவியவள் ப்ரியா. கடத்தியவனைக் கொலை செய்துவிட்டு அதைக் கைவசம் வைத்திருப்பவள் ஷீலா. வீணாகச் சந்தேகப் படக் காரணமாயிருப்பவள் மீன்காரி மீனா.

மூன்று வேடங்களிலும் சிலுக்கு ஜ்வலிக்கிறார். (நடிப்பில் பாதி – தோற்றத்தில் மீதி). திகட்டத் திகட்ட ஜிலேபி சாப்பிட்ட மாதிரி சிலுக்கு படம் முழுக்கத் தோன்றும்போது சற்றுச் சிரமமாகத்தான் இருக்கிறது.

ஆனால் ஒரு முக்கிய கதாபாத்திரமாக நடிக்கத் தகுதிகள் இவரிடம் உள்ளன என்பதைப் படம் நிரூபித்துள்ளது.

சிலுக்கைத் திரையிலிருந்து வடிகட்டி எடுத்து விட்டால் மிஞ்சுபவர்களில் பானு சந்தரும் ரகுவரனும் முன் நிற்கிறார்கள். இருவருமே போலீஸ் இலாகாவைச் சேர்ந்தவர்கள். ஒருவர் எதிர் மற்றொருவர் புதிர்.

ரகுவரன் உண்மையான கொலைகாரி ஷீலாவைக் காதலித்த காரணத்துக்காக அதே தோற்றத்தில் உள்ள ப்ரியா மீது பழியைச் சுமத்தப் பார்க்கிறார்.

பானு சந்தரோ தன் காதலி ப்ரியாவை நிரபராதி என நிருபித்து உண்மையான கொலைகாரியைக் கூண்டில் நிறுத்தப்பார்க்கிறார்.

உண்மையில் வைரம் யாரிடம் இருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளாத ஒரு கும்பல் ப்ரியாவையும் மீனுவையும் கடத்திக் கொண்டு வந்து மிரட்டுகிறது.

கதைக்காகக் கடமை தவறிய போலீஸ் அதிகாரியாக வந்தாலும் ரகுவரன் நடிப்பில் கடமை தவறவில்லை. என்றாலும் உருட்டலுக்கும் மிரட்டலுக்கும் பயப்படச் செய்யும் தோற்றம் அவரிடம் இல்லை என்பதும் உண்மை!

பானுசந்தர் — பாதிக் கதாநாயகனாக வந்தாலும் பாந்தமாகச் செய்துள்ளார்.

பல்ராம், ஜானி கடத்தல் கூட்டத்தில் 'மொழு மொழு' பொம்மையாக வந்து நிற்கிறார் 'ஊதாப்பூ' விஜயலட்சுமி. கொஞ்சம் அசையக் கூடாதோ?

லூஸ் மோகன் குடி போதையில் பேசிச் சிரிக்க வைக்கிறார். மூர்த்தி என்ன காமிக் செய்தார்? (ஞாபகத்திற்கு வரவில்லை)

கதை, வசனம், செல்வகுமார். கதையில் அளவுக்கு மீறிக் குழப்பியிருக்கிறார்.

கஜேந்திரமணியின் காமிராவுக்கு கோவா நான்காவது 'சில்க்'காகப் பயன்பட்டிருக்கிறது. கோவாவின் அழகை மிச்சம் மீதியில்லாமல் ரசித்திருக்கிறார்.

குமாரர்களின் படத்துக்கு அப்பா (எம். எஸ். வி.) இசை. நான்கில் இரண்டு நாக்கில் ஒட்டும்.

ஒய். வி. கோபி கிருஷ்ணன் டைரக்ஷனில் கமர்ஷியல் கண்ணோட்டம் மிகை.

கடத்தல் செய்யப்பட்ட வைரத்தைப் போலவே படமும் மினுக்...மினுக்...மினுக்.

பங்கேற்று ஜெய்சங்கரோடு மோதுகிறார் எனச் சொல்வதே பொருந்தும்.

யார் எதைச் செய்து காட்டினாலும் அதை எந்தக் கோணத்திலிருந்து எப்படி ரசிக்கலாம் என்பதற்கு ஒளிப் பதிவாளர் பாபுவின் காமிரா வழி காட்டுகிறது.

'கமர்ஷியல் படங்களைத் தருவதில் கை தேர்ந்தவர்' என்கிற கண்ணோட்டத்தை இதில் மேலும் வலுப்படுத்திக் காட்டியுள்ளார் எஸ்.பி. முத்துராமன். உச்ச கட்டத்தில் செங்குத்தான பாறையில் ரஜினி காந்தை ஏறவிட்டு, ராதாவையும் சிலுக்கையும் ஊஞ்சலில் கட்டி இழுத்து அந்தரத்தில் நிறுத்தும்போது படம் பார்ப்பவர்களின் மனத்தையும் ஊசலாட வைக்கிறார்.

இசையமைப்பாளர் இளையராஜா இப்படத்தில் கொஞ்சம் இளைப்பாறியிருக்கிறார்.

புலியூர் சரோஜா ஆட்டிப் படைக்க சிலுக்கும் ரஜினியும் ஆடும் ஆட்டங்களை ரசிக்கலாம்.

கதைவசனம் பஞ்சு அருணாசலமும், இதர நட்சத்திரங்களும் (கதாநாயகி ராதா உட்பட) புலிக்கு முன்பு பூனையாகிப் பதுங்கி விட்டனர்.

படத்தின் நிஜமான பாயும் புலிகள் கதாநாயகனும் டெக்னீஷியன்களுமே!

- திரைஞானி

# பாயும் புலி

தங்கையைக் காரில் அடித்துக் கொன்ற கடத்தல்காரனைப் பழிக்குப் பழி வாங்கப் பரணி தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டது பாதிக் கதை. பழி வாங்கியது எப்படி என்பது மீதிக் கதை.

மகாசக்தி குருகுலத்தில் சேர்ந்து கடுமையான பயிற்சிகளை மேற்கொள்கிறார் ரஜனி காந்த். ஆங்கிலப் படம் 36வது சேம்பர் ஞாபகம் வருகிறது. 'ராஜ்திலக்' பட்டத்துடன் வெளியேறி இவர் எதிரிகளுடன் மோதும்போது கற்ற வித்தைகளை விட ஸ்டண்ட் மாஸ்டர் (ஜூடோ ரத்தினம்) கற்றுக் கொடுத்த வித்தைகளே கைகொடுக்கின்றன. (பாதிப் படம் வரை கற்ற வித்தைகள் வேஸ்ட்.)

பிரமிக்க வைக்கும் வகையில் எதையும் திரையில் காட்டுவது ஏ.வி.எம்.மின் வழக்கம் இதிலும் அப்படியே. பலராமனின் இரகசிய அறைக்குப் போகும் வழி ஓர் உதாரணம்: ஆர்ட் டைரக்டர் சலம்.

ரஜனிகாந்த் சிறப்பாக நடித்திருக்கிறார் எனப் பாராட்டுவதை விட வேகமாகவும் துணிச்சலாகவும் சண்டைக் காட்சிகளில்



# சின்னப் பொண்ணும் பெரிய ஸ்டாரும்



டினு ராஜன் படு கெட்டிக்கார, கறுகறுப்பான பெண்.
காமிக்ஸில் எவ்வளவு இன்டரஸ்டோ அவ்வளவு ஆர்வம் பத்திரிகை, டி.வி., ரேடியோவில்.
(அப்பா ராஜன் பத்திரிகையாளர்; மியூசிக் கிரிடிக்!)
அமிதாப்புக்கு ஆபத்து என்ற செய்தியைப் படித்த அவள், தன் அப்பாவிடம்
''அப்பா, அமிதாப்புக்கு ரத்தம் தேவைப்படுகிறதே
நான் கொடுக்கப் போகிறேன்'' என்றாள்.
அதற்கு அப்பா, ரத்தத்தின் வகைகளைப் பற்றியும் எந்தெந்த ரத்தம் எந்தெந்த க்ரூப்புடன்
சேரும் என்பது போன்ற விவரங்களையும் சொன்னார்.
இதையெல்லாம் கேட்டவுடன் டினு என்ன சொன்னாள் தெரியுமா?
''என் ரத்தத்தை டெஸ்ட் செய்து என்ன குரூப் என்று பாருங்கள்'' என்று பிடிவாதம்
பிடித்தாள். ''பார்த்தோம். அமிதாபிற்குப் பொருந்தக்கூடிய ரத்தம் என்று தெரிந்தது.
உடனே அவள் அமிதாபிற்குக் கடிதம் எழுதிவிட்டாள்.
சின்னக் குழந்தைகள் ரத்த தானம் செய்ய முடியாது என்று நான் சொன்னதை
அவள் நம்பினால்தானே? அமிதாபிடமிருந்து பதில் வரும் என்று
நம்பிக்கொண்டு இருந்தாள். வரவில்லை.
திடீரென்று சென்ற வாரம் அமிதாப் கடிதம் போட்டிருந்தார். டினுவைத் தன் வீட்டிற்கு
வரும்படி. டினுவை அழைத்துக் கொண்டு போனேன். அமிதாப் அவளைக்
கட்டி அணைத்துக்கொண்டு பரிசுகள் கொடுத்தார்.
'அங்கிள் ஹேப்பி பர்த்டே சொல்லுங்கோ' என்றதும் அமிதாப் ஒரே குஷியாக
'அட, இன்னிக்கு உன் பர்த்டேயா? வெரி குட், வெரி மெனி ஹேப்பி ரிடர்ன்ஸ் ஆஃப் தி டே
என்று சின்னக் குழந்தைக்குச் சமமாகச் சொன்னார்'' — என்றார் ராஜன்.
பம்பாய் வந்தால் தம் வீட்டுக்கு வரும்படி சொல்லியிருக்கிறாராம்.
''நீங்கள் ரொம்ப பிஸியாக இருப்பீர்கள் அங்கிள்'' என்றாள் டினு.
''நோ... நோ... டினுவிற்கு நான் எப்போதும் ஃப்ரீ'' என்றாராம் அமிதாப்! -கமல்

---

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431643)

Assistant Editor: P.S. Mani Editor: K. Rajendran

